# நாற்பெரு வள்ளல்கள்

(குறிப்புரையுடன்)



மா. இராஜமாணிக்கம்,
தமிழ்ப்புலவர், சர். தியாகராயர் கலாசாலை,
வண்ணாரப்பேட்டை, சென்னை.

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

பதிப்புரிமை] 1931 [விலை அணா 7

**Approved by the Text-Book Committee**

*Vide Fort St George Gazette Page 615*

*Dated 11th November 1930*

# முதற் பதிப்பின் நூன்முகம்

---

இச் சிறு நூல், தன்னலங் கருதாத் தனிப் பெரு வள்ளல்களாய்த் தமிழ் நாட்டில் பெருமை யுற்று விளங்கிய ‘பாரி, ஆய், அதியன், குமணன்’ என்போரது வரலாறுகளைக் கூறுவது. இஃது, புற நானூற்றின் பெரும்பான்மை தழுவியும், அகநானூறு, நற்றிணை முதலிய பிற இலக்கியங்களைச் சிறுபான்மை தழுவியும் ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளது. இதில், பண்டைத் தமிழ் வேந்தர், வள்ளல்கள், குடிகள், பரிசிலர், புலவர் என்ற இவர்களுடைய நாகரீக வாழ்க்கையும், குணவிசேடங்களும், நிலப்பகுதிகளின் தோற்றம், இயற்கை வனப்பு முதலியனவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இந் நூல், இறுதியில் அரும்பதங்கட்குப் பொருள் பெற்றுள்ளது. மாணவ வுலகம் கற்றுப் பயன் அடையவேண்டு மென்ற கருத்தோடு சீரிய செந்தமிழ் நடையில் இஃது எழுதப்பட்டதாகும்.



நக்கீரரகம்,
வண்ணை } மா. இராஜமாணிக்கம்

---

[இந் நூலைப்பற்றித் தமிழ்ப் பேராசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் இந் நூலாசிரியருக்கு எழுதிய நிருபம்]

'பழனி விலாசம்'
தண்டையார்ப்பேட்டை,
15—2—30

அன்புள்ள நண்பரே,

தமது 'நாற்பெரு வள்ளல்கள்' என்னும் நூலினைப் படித்துப் பார்த்தேன். தமிழகத்திலே வரையா வள்ளன்மையுடன் விளங்கி, இணையின் றுயர்ந்த புகழால் என்றும் பொன்றாது நிற்கும் பாரி, ஆய், அதியமான்—அஞ்சி, குமணன் என்போரின் வரலாறுகளைச் சங்க இலக்கியங்களின் ஆராய்ச்சி கொண்டு இனிதுரைக்கும் இந் நூல் உயர் வகுப்பு மாணவர்கள் விரும்பிக் கற்றற் குரியதாகும். நீங்கள் இதுபோலும் பல ஆராய்ச்சி நூல்கள் எழுதுமாறு செந்தமிழ்த் தெய்வத்தின் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

ந. மு. வேங்கடசாமி நாட்டார்

## இரண்டாம் பதிப்பின் நூன்முகம்

---

'நாற்பெரு வள்ளல்கள்' என்ற பெயரோடு மிளிரும் இச் சிறு நூல் ஆன்றோர்களால் ஆதரிக்கப்பட்டமையின், இதுபோது இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. இத்தகைய சங்க நூல்களால் தழுவப்பட்ட சிறு நூல்களை எழுதுமாறு என்னை இத் துறையில் ஊக்கிய தமிழ் அறிஞர்க்கும், என்னகத்தே இருந்து இன்பமளிக்கும் திருவருளுக்கும், இச் சிறு நூலைப் படித்து மதிப்புரை தந்த தனித் தமிழ்ப் பேராசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கட்கும், எனக்குத் தமிழறிவை யூட்டிய என்னாசிரியர் கரந்தைத் தமிழ்ச் சங்கப் புலவர் ஆர். வேங்கடாசலம் பிள்ளை யவர்கட்கும், இந் நூலை எழுத எனக்குப் பேருதவியா யிருந்த என்னாசிரியர் கோ. இராமலிங்கத் தம்பிரான் அவர்கட்கும், இது போன்ற நூல்கள் பல வெளியிட்டு மாணவர்க்குத் தமிழ்ச் சுவையூட்டும் கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனியாருக்கும் எனது வணக்கம் உரியதாக,

சுக்கிரவாரம்,
வண்ணை

மா. இராஜமாணிக்கம்.

# பொருளடக்கம்

# நாற்பெருவள்ளல்கள்



## I. வேள்—பாரி

### 1. தமிழ்நாடும் வேளிரும்

அமிழ்தினும் சிறந்த தமிழ்மொழியினை வளர்த்து வந்தவர்கள் சேர சோழ பாண்டியனென்னும் முடியுடை வேந்தரன்றி, 'வேளிர்' என்ற ஒரு வகுப்பாரும் இருந்தனர். வேளிரைத் தென்னாட்டு மூவேந்தர் பெரிதும் ஆதரித்தனர். வேளிர்தம் மகளிரையும் மூவேந்தர் மணம் புரிந்து கொண்டனர்.

இவ்வாறு, ஆட்சி புரிந்த வேளிர், வரையாது வழங்கும் வள்ளன்மையாலும், அரசரால் பெற்ற வரிசைகளாலும், தண்ணளியாலும், வலிமையாலும், பண்டுதொட்டே நம் தமிழ்நாட்டில் பெரும் புகழ் பெற்று விளங்கினர். இவர்களைப் பாடாத புலவர்கள் இலர் என்றால், இவர் தம் பெருமையைப் பகரவும் எளிதோ? இவ் வேளிரும் இவர் தம் மக்களும் தமிழ்ப்புலமை பெற்று விளங்கினர். இத்தகைச்

சிறப்புடை வேளிர்களில் மிக்கச் சிறந்தோராகக் கருதப்படுபவர் எழுவர். அவர்கள், 'பாரி, ஓரி, மலையன், எழினி, பேகன், ஆய், நள்ளி' எ

இவ்வெழுவரில் ஒருவனும் வள்ளலும், புலவர்க்கு வெ யனுய் விளங்கியவனும், பாவலராலும் போற்றப்பட்டவனுமான 'பாரிவேள்' என்பவனது வரலாற்றை கூறுவோம். இவ் வேளிர்களுடைய வரலாறுக 'இதுமுதல் இதுவரையில்' என்பதாக வரையறுத்து ந கூறக்கூடிய ஆதாரங்கள் இன்மையால், புலவர் பாடப்பட்ட செய்யுட்களிலிருந்தே ஒருவாறு இவர் தம் வரலாறுகளை அறியவேண்டும்.

## 2 பறம்பு நாடு

'புரிசைப் புறத்தினிற் சேரனுஞ் சோழனும் போர்புரிய
இரியச் சயங்கொண்ட போழ்தினில் யாமினி யீங்கிவனைப்
பரிசுக்கு நல்ல கவிபாடி னுலவரும் பாக்யமென்றே
வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டியமண் மண்டலமே''

—பாண்டி மண்டலச் சதகம்.

இச் செய்யுளால் வேள்-பாரி பாண்டியநாட்டைச் சேர்ந்தவன் என்பது அறியப்படுகிறது. இவனுக்குரிமையாயிருந்த நாடு 'பறம்புநாடு' எனப்படும். ஆதலின், பறம்புநாடு பாண்டியநாட்டைச் சேர்ந்த நாடாகும். 'பறம்பு' என்னும் அழகியமலை அந்நாட்

டில் உள்ளது. அஃது இக்காலத்தில் 'பிரான்மலை' என வழங்குகின்றது என்பர் சிலர். பறம்புநாடு வளத்தில் மேம்பட்டிருந்தது. இனிய பூஞ்சுனைகளையும் பூஞ் சோலைகளையும் மிகுதியாகக் கொண்டது. இயற்கை யமைப்பால் அப் பறம்புநாடு பல் புலவர்கட்குப் பொழுது போக்கை உண்டுபண்ணி வந்தது என்ன லாம். பல வளங்களாலும் சிறந்த அப் பறம்புநாடு தன்னகத்தே முந்நூறு ஊர்களைக் கொண்டதாகும். அந் நாட்டிற்கு நடுநாயகமாக இருந்தது பறம்புமலை. மூங்கில்களும் பலா மரங்களும் இனிய பூஞ்சுனைகளும் மிகுதியாக அம்மலையில் உண்டு.

பறம்பு மலைமீது ஒரு பேர் அரண் உண்டு. அவ்வரணில் வேள் - பாரி என்பவன் தன் குடிமக் களோடு வாழ்ந்து வந்தான். இயற்கை யமைப்பாலும் செயற்கை யமைப்பாலும் அவ்வரண் பார்ப்போர் உள் ளத்தைக் கவரும் கட்டழகு வாய்ந்தது. குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணைக் களின் பிரிவையும் பொருள்களையும் அவ்வரணுள் காண லாம். அதனை நவமணிகளின் நிறைந்த கற்பெட்டி யென்னலாம். அவ்வரண் அரசனது அழகிய அரண் மனையையும், ஆயுத சாலைகளையும், பொக்கிஷ சாலைகளை யும், குடிகளின் இல்லங்களையும், சிங்கார மண்டபங் களையும், பன்மரத் தோப்புகளையும் தன் அகத்தே கொண்டது. என்றும் வற்றாத, இனிமை பயப்ப

பதமான குளிர்ந்த நீரையுடைய பூஞ்சுனையொன்று அவ்வூருள் இருந்தது.

“கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த
தேங்கமழ் புதுமலர் நாறுமிவள் நுதலே”

—அகநானூறு

அவ்வூரண் அரிய காவலைக் கொண்டது,

“ , ஒள்ளிழைக் குறுமகள்
பேரிசை யுருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப் பினளே”

—நற்றிணை

## 3. வேள்—பாரி

இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன், ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டவன். இவன் நல்லொழுக்கம் வாய்ந்தவன், குடிகளை அன்போடும் அருளோடும் காத்து வந்தனன், இரப்போரைக் காணச் சகியான், யார் எதை வேண்டினாலும் ‘பெறுக’ என்று அன்போடு கூறி அவர் வேண்டுவதை அளிப்பன். இவனைப் பாடாத புலவர் இல்லை, சுந்தர மூர்த்தி நாயனாரும் தம் தேவாரத்தில், “கொடுக்கி லாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்

பாரியிலே" என்று கூறியுள்ளார். கொடையிற் சிறந்து விளங்கிய வள்ளல்கள் பலர் இருந்தும், அப் பெரியார் பாரியை உதாரணமாகக் காட்டியதேன்? அவன் அக் காலத்து வள்ளல்கள் அனைவரினும் மேம்பட்டு விளங்கியதாலன்றோ?

"புலங்கந் தாக இரவலர் செலினே
வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி"

—அகநானூறு

என்று நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியரான ஔவையாரால் புகழ்ந்து பாடப்பெற்றவன் இப் பாரி வேள்.

இவன், தெய்வத்தமிழ்ப்பாவலர் போற்றும் 'கபிலர்' என்னும் புலவர் பெருமானின் ஆருயிர் நண்பன் ஆதலால், இவன் ஒழுக்கத்திலும் குணத்திலும் மேம்பட்டவன் என்பது வெள்ளிடைமலை. இப் பாரி, வில்லும் வேலும் கழலும் கண்ணியும் தாரும் ஆரமும் தேரும் வாளும் உடைய குறுநில மன்னவர். இவன் நாட்டையும் பொருளையும் படையையும் அதிகம் பெற்றிலனாயினும், இவனது வள்ளன்மை மூவேந்தர் வள்ளன்மையினும், தலைமைபெற்று விளங்கியது.

இவனது மனைவி கணவன் கருத்துக் கிசைந்த காரிகை.

பாரிவேளுக்குப் பெண்மக்கள் இருவர் இருந்தனர். அவர்கள் கல்வியில் கலைமகளையும் அழகில் அலைமகளையும் பொறையில் மலைமகளையும் ஒத்திருந்தனர் அவர்கள் தமது இளமையிலேயே கபிலர் பெருமானிடம் கல்வி கற்று, கவிபாடும் ஆற்றலையும் பெற்றுச் செந்தமிழ்ச் செல்வியராய் விளங்கினர்

பாரி, மனமொத்த தன் இல்லாளுடனும், பெண்மணிகளுடனும், உயிர் நண்பரான கபிலருடனும் காலங்கழித்து வந்தான்

## 4 முல்லைக்குத் தேர் நல்கியது

உம்பர்யா வணைய கையனாகிய பாரிவேள் தனது பொற்றேர் ஊர்ந்து வேட்டைக்குப் புறப்பட்டான் பறம்புமலையை யடுத்த பெரிய காட்டில் பலவகைப் பட்ட கொடிய விலங்குகள் அடிக்கடி மலைநாட்டாரைத் துன்புறுத்துவதுண்டு மலைச்சாரலின்கண் வாழும் மக்கள் வளர்த்து வந்த ஆடு மாடுகளை அடிக் கடி, புலி முதலிய விலங்கினங்கள் கவர்ந்துகொண்டு போவதுண்டு தன் நாட்டுக் குடிகளுக்கேற்படும் இன்ப துன்பங்களுக்கு அரசன் உரிமையுடையவன் அன்றோ? அதனால், தன் குடிகளுடைய துயரைப் போக்கக் கருதியே பாரிவேந்தன் வில்லும் வாளும் ஏந்தி, விலங்குகளை வேட்டையாடச் சென்றான்

வள்ளல் பலவகை மிருகங்களை அம்பெய்து கொன்றான், தன்மனம் மகிழுமாறு அன்று வேட்டையாடினன். ஆடியபின்னர், அவன் தன் தேர்மீது இவர்ந்து வந்துகொண்டிருந்தான். அவ்வாறு அவன் வருகையில், தன் நாட்டு வளப்பத்தைக் கண்டு மகிழ்பவன் போல் இருபுறங்களிலும் ஊன்றிய பார்வையுடனிருந்தான். அவன் ஓர் இடத்தில் முல்லைக் கொடியொன்று படர்வதற்கு ஏற்ற கொழு கொம்பு இல்லாது, வெயிலாலும் காற்றாலும் துன்புறுவதைக் கண்டான். உடனே அவ்வள்ளல் அம் முல்லையருகில் தன் தேரை நிறுத்தினான், கீழிறங்கினான், முல்லை படும் துன்பத்தைக் கண்டான், அவன் துயரமும் மயக்கமுங் கொண்டது, கண்களில் நீர்த்துளிகள் துளித்தன. பிறர் துயரம் காணச் சகியாத அவன் "அந்தோ! இக் கொடியை இதுவரை யாரும் கவனிக்கவில்லையோ! செடி கொடி முதலியவைகட்கும் உயிர் உண்டென்று கூறுகின்றனரே! இக்கொடி, படர்தற்கேற்ற கொழுகொம்பு இல்லாது இவ்வாறு வாடுகின்றதே, என் செய்வேன்?" என்று இரக்கமுற்றவனாய்க் கொம்பொன்றைத் தேடி அங்கும் இங்கும் அலைந்தான். கொடி படர்தற்கேற்றதாக உள்ள கொம்பு கிடைக்கப் பெறாது மனம் வருந்தினான். "யான் என் செய்வல்! ஏற்ற கொம்பு ஒன்றும் கிடைக்கவில்லையே. இதன் வாட்டத்தைக் கண்டும், இதற்கு உதவி செய்யாது யான் செல்லுதல் அழகோ? அவ்வாறு யான் சென்

ருனும், என் மனச்சாட்சி என்னைச் சுட்டெரிக்குமே. பிறர் துயரங்களைச் சகியாத் தன்மை வாய்ந்த யான், இச்சமயத்தில் இம் முல்லைக் கொடிக்கு ஏற்ற உதவி செய்ய வகையறியாது தயங்குகின்றேனே" என்று கூறி வருத்தமுற்றான். பின்னர் ஏதோ யோசித்தவன்போல், அவன் களிப்புற்று, "ஆ! மறந்தேன், என் பொற்றேரை இம் முல்லைக்கொடி படர்வதற்கு ஆதாரமாக வைத்துவிட்டுச் செல்வேன், இஃதே சரியானது" என்று கூறிக்கொண்டான். உடனே அவன் தன் பொற்றேரைச் சிறிதும் முன் பின் யோசியாது, காற்றால் அலைப்புண்ட அம்முல்லைக் கொடிக் கருகில் நெருங்க வைத்தான். ஆடிக் கொண்டிருந்த கொடி இனிதாய்ப் படருமாறு, தன் தேர்மீது அதனை எடுத்து விடுத்தான்.

தேரை முல்லைக்கு நல்கியதால் அவன் அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, வெயிலால் மண்டை வெடிக்கவும், கால்கள் கொப்பளிக்கவும் நடந்து சென்று தன் அரண்மனையை அடைந்தான். அவ்வள்ளல் பெருமான் செய்த இவ்வரிய செயல் பல நூல்களில் பல அறிஞரால் பாராட்டப்படுகின்றது.

"சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பறம்பிற் கோமான் பாரி"—

—சிறுபாணாற்றுப்படை

“பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி”— புறநானூறு

“முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்”
—புறப்பொருள்வெண்பாமாலை

## 5 கபிலர் புகழ்மொழிகள்

கபிலர் பாரிவேளது அருங்குணங்களைக் கண்டு அவ்வப்போது புகழ்பவர். அவர் ஒருகால் பாரியினது வள்ளன்மையைப் புகழ்பவராய், “நல்லன வென்றும் தீயனவென்றும் சொல்லப்படுவன சூடும் மலர்கள், அவையிரண்டினும் வேறான எருக்கம்பூக்களாயினும் ஒருவனுடையனவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்று சொல்லாவாம். அதுபோல, அறிவில்லாதாரும் அற்பகுணமுடையாரும் சென்றாலும் பாரி அவர்கட்குப் பொருள் ஈதலில் தவறான். இவ்வுலகத்தைக் காப்பாற்ற மாரியுண்டு. அங்ஙனம் இருக்கச் செவ்விய புலமைவாய்ந்த அறிவுடையோர் ‘பாரி, பாரி’ என்று சொல்லி, அவனது பல புகழையும் வாழ்த்தி அவனொருவனையே புகழ்வர். இதனால் மாரியினது வள்ளன்மையை விடப் பாரியது வள்ளன்மை மிகச் சிறந்ததென்பது வெள்ளிடைமலை. பறம்பு நாட்டில் மிகுந்துள்ள மரங்கள் சந்தன மரங்களே. அவற்றைக் குறத்தியர் எரிக்கின்றனர். சந்

கன மரங்களை யெரித்தலால் உண்டாகும் புகை அருகேயுள்ள வேங்கை மரத்திற் படியும் இத்தகைய வளம்பொருந்திய பறம்பு நாட்டைப் பாரி, பாடுவார்க்குப் பரிசிலாகக் கொடுத்து விட்டனன். இவனது பரந்த சிந்தையையும் விரிந்த நோக்கத்தையும் நற்குண நற்செயல்களையும் என்னென்பது !" என்று காக்குள கூறி வியந்தார்.

அவர் ஒரு நாள் ஒரு விறலியைச் சந்தித்தார். அவள் விரைவாகச் சென்றுகொண்டிருந்தாள். கபிலர் அவளை நோக்கி, "ஒளிர்கின்ற நுதலையுடைய விறலி, உயர்ந்த பறம்புமலையினது காவலனும், அவனுடைய மலையினது சிகரந்தோறும் இழிதரும் நீரினும் மிகுந்த இனிய மென்மையுடையவனுமான பாரி பக்கலிலே நீ பாடிச் செல்வாய், அவ்வாறு செல்வாயாயின், எம் மன்னர் பெருமானிடமிருந்து சிவந்த அணிகளைப் பெறுகுவை, வேண்டும் பரிசிலையடையலாம்" என்று, பாரியின் வள்ளன்மையைச் சிறப்பித்துப் புகழ்ந்தார்.

விண்ணவரும் மண்ணவரும் புகழ்ந்துபோற்றும் படி, பாரி தனக்கு உரித்தாயிருந்த முந்நூறு ஊர்களையும் தன்னைப் பாடிவந்த இரவலர்க்கே அளித்து மகிழ்ந்தனன். பிறர் தன்னைப் பெறுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்க பாரிவேளது புகழ் சொல்லவும் எளிதோ ?

## 6 மூவேந்தர் முற்றுகை

'பொறாமை' என்பது மக்கள் மனத்தே யுண்டாகும் ஒரு தீய எண்ணம். அஃது அறியாமையால் உண்டாவதேயன்றி வேறன்று. கற்றோராயினும் கல்லாராயினும், வறிஞராயினும் செல்வராயினும் இத் தீய எண்ணம் இல்லாதார் இலர். பிறரது செல்வப் பெருக்கைக் கண்டு, அவர்மீது பொறாமை கொள்வார் பலர். பிறரது கல்வி யறிவைப் பார்த்துத் தம்மினும் மேம்பட்டவராய அவர் விளங்குதலைக் காணச் சகியாதார் பலர். பிறர் தமது கொடைத் திறத்தால் எய்தும் புகழைக்கண்டு அவர்மீது பொறாமை கொள்பவர் சிலர். வேந்தராயினும், முற்றும் துறந்த பெரியாராயினும் இப் பொறாமை என்னும் கொடிய பேய் அவரைப் பிடித்துத் தன் ஆட்சியைச் செலுத்துகின்றது.

தமிழ் நாட்டில் ஆண்டுவந்த சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடைத் தமிழ் வேந்தர் மூவரும் இப்பொறாமை என்னும் பேய்க்கு ஒருகால் இலக்காயினர். அவர், பாரிவேளது வள்ளன்மையால் உண்டான குற்றமற்ற புகழைக் கேட்டு ஆற்றாராயினர். பாரியின் புகழ், காற்றானது உலகு முழுதும் பரந்து செல்லுதல்போலத் தமிழ் நாடெங்கும் பரந்தது. யாவரும் அவனது கொடைத் திறத்தை வியந்தனர். குறுநில மன்னர் அவனைப் போற்றிப் புகழ்ந்தனர்.

பொருமை கொணட மூவேநதரும ஒனறு 'சேரநது தததம தானையோடு சென்று பாரியைப 'போரில வெனறுவிடத துணிநதனா அவா, கடல போனற தம சேனைகளோடு பறமபு நாடடை யடைந தனா, பறமபு மலையை முறறுகை யிடடனா இச செயதி பாரிககு எடடியது வளளனமையிற சிறநத பாரிவேள மூவேநதா செயகைககு மருணடிலன அவாகளை எதிாககவிலன, தனது அரணுககு ஏறற பாதுகாவலை வைததுத தன அரணமனையில இனிதிருந தான அரணில உளளாாககு வேணடிய உணவுப பொருளகள யாவும அரணுளளேயே இருநதமையால, பாரியும அவனுடைய குடிகளும துனபமினறி இனபுற றுடன இருநதனா

சில மாதஙகள சென்றபினனா, அரணுள இருந தவாகளுககு உணவுபபொருளகள குறைநதன அவ வமயம புலவா பெருநதகையான கபிலா, தாம வளாததுவநத எணணிறநத கிளிகளைத தினநதோறும அரணுககு வெளியே விடுவாா அவை விளை நிலங களுககுச சென்று நெறகதிாகளைக கொணடு மீளும அவறறை அரிசியாககி அரணில இருநதோா உணடு வநதாாகள

இவவாறு பல நாடகள கழிநதன. கபிலா முதலாக அரணுள அகபபடடோா, 'இனி உணவினறி வருநத நேரினும நேருக' என்று பயநதனா. மூவேநத

ரும் பாரியை வெல்ல இயலாது மனஞ் சலித்தனர். அவ்வெவ்வவையில், புலவர் பெருமானாகிய கபிலர் அரண் சுவர்மீது நின்று, முற்றுகையிட்டிருக்க மூவேந்தரை நோக்கி, ''தமிழ்வேந்தீர், பாரியின் அரணை வீணே முற்றுகையிட்டுச் சலித்தீர். அவனது பறம்பு இரங்கத்தக்கது. அது உழவரால் உழுது விளைக்கப்படாத நான்கு விளையுளையுடையது. அவற்றுள், முதலாவது, சிறிய இலையையுடைய மூங்கில்நெல் விளையும், இரண்டாவது, இனிய சுளையையுடைய பலாவின்பழம் ஊழ்க்கும், மூன்றாவது, கொழுவியகொடியையுடைய வள்ளிக்கிழங்கு காழ்விருக்கும், நான்காவது, இம் மலையரணில் தேன் மிகுந்துள்ளது. பாரியினது பறம்புமலை அகல் நீள உயரத்தால் வானிடத்தை யொக்கும். இம்மலையில் உள்ள பைஞ்சுனை வானத்தின்கண் உள்ள மீனை யொக்கும். இத்தகைய இயற்கை வளங்களைப்பெற்ற பறம்புமலையில் உள்ள பாரிவேளை நீவிர் வெல்லுதல் எளிதன்று. பெருமையைக் கொண்ட முரசினை யுடைய நீவிர் மூவேந்தரும் முற்றுகையிடினும், மிகுந்த யானைப்படை தேர்ப்படை யுடையீராயினும், உங்கள் முயற்சியால் இம் மலையரணைக் கொள்ளமாட்டீர், நமது வாள் வலியால் எம்மரசன் தளரான் அதனை யான் நன்கு உணருவேன். யாழ் வாசித்து நும் விறலியர் பின்வர ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் அவனிடம் நீவிர் சென்றால், அவன் உங்கட்கு நாட்டையும் மலையையும் பரிசிலாகத் தருவன். அவ

வாறு செய்யாது எத்தனை காலம் முற்றுகையிட்டிருந்தும் பயன் அடையமாட்டீர். மற்றொன்றும் கூறுவேன் கேளும். இப் பறம்பு நாடு முந்நூறு ஊர்களை யுடையது. இது குளிர்ந்த நல்ல நாடு. அம் முந்நூறு ஊர்களையும் பரிசிலர் பாடிப் பெற்றனர். அப் பரிசிலர் போன்று நீவிரும் பாடுவீராயின், நுமக்குப் பறம்பு மலையன்றிப் பாரியும் நாமும் உள்ளோம்," என்று பாரியது வள்ளன்மையையும், மலைநாட்டு வளப்பத்தையும் கூறி முடித்தனர்.

அவர் கூறியவை உண்மையெனவே மூவேந்தரும் உணர்ந்தனர். ஆனால், பாரியை எவ்வாறு ஆயினும் கொல்லவேண்டும் என்று எண்ணிக்கொண்டனர். அவர்களிடம் குடிகொண்டிருந்த பொறாமை காரணமாக, ஏதோ ஒரு சூழ்ச்சி செய்து பாரியைக் கொன்று விட்டனர். இரவலர்க்கு இனியவனாய் விளங்கிய பாரிவேள் அறிவிழந்த பொறாமையின் வயப்பட்ட மூவேந்தரால் மாண்டதைக் கண்ட அவனது ஆருயிர் மனைவி உயிர்நீத்தாள்.

## 7. கபிலர் புலம்பல்

பாரிக்கு உயிர் நண்பரான கபிலர், தமது நண்பனும் கொடைவள்ளலுமான பாரிவேள் உயிர் நீத்ததைக் கண்டு பெரிதும் வருந்தினார். அவர் அவன் புகழைக் கூறிப் புலம்புபவராய், "அழகிய பாரிவேளது

பறமபுமலையில உணடாகும தேறல பாரிபோல இனிமையானது, அவன இறநககால அது கழிநதது, பறமபுநாடடு மகளிர மிகக அழகுடையவாகள, குளிரநத கணணையுடையவாகள, இனிய முறுவலையுடையவாகள, நெடுவரையேறி முனபு வேநதனது கலிமாவை எணணுவா, எம வேநதன இறநதுபடட இபபோது ஈநதிலைக குபபையேறி உமணா உபபுச செலுததும சகடததை எணணுவா சோவேன, யான, எஙா வாழநாடகள கெடுவதாக, புதுவருவாய இடையறாது வரும அகனற நாடு பகைவா கொளளலாயிறறே!

சனிமீன புகைககளோடு கூடிய புகைநதாலும, எலலாத திசைகளிலும புகை தோனறினும, தெனதிசைக கணணே உளள 'வெளளி' போககு உறினும், பாரிவேளது நாடடுவளம வறறாது, வயலகளில விளைவு அதிகமாக வுணடாகும, புடபஙகள அலரும, பெணகள வருததம இனறிக குழவிகளை யீனுவாாகள, மழை ஒருபோதும அவனது நாடடில பிழைககாது பாரியது வளளனமையனறோ இவறறிறகுக காரணம! இககதையை மனனன மாணடனனே! எடடாம பககததுப பிறைபோலும வளைநத கரைகளையும தெளிநத நீரையும உடைய சிறிய குளம பாதுகாபபார இலலாமையால உடைநதுவிடும போலும கூரிய வேலையும திரணட தோளையும உடைய பாரிவேளது குளிரநத பறமபு நாடு இனிச சீரகெட வேணடியதே. பாரி

யது பெருமையை யான் என்னென்று இயம்புவேன் நிழல் இல்லாத நெடிய வழியில் தனிமரம்போல் மூரசையுடைய அரசரினும் மிகுந்த இரவலர்க்கு வழங்கும் வண்மையை யுடையன் பாரி, அவனது நாடு முன்பு, மெல்லிய திணையாகிய புதுவருவாயையுடையது, வேங்கை மரங்களையுடையது, கதிரினது அடியும் கல்லும் ஒழியாமல் மிக்க காய்க்கும் பயிர்களை வயலிடங்களில் உடையது வரகு அதிகமாக விளைவதும் அவரைக்கொடிகள் அதிகமாக உள்ளதுமாகிய இந் நாடு இனிக் கெடும் போலும்" என்று நாட்டையும் பாரியையும் நினைந்து நினைந்து மனம் வருந்திய புலம்பி யழுதார்

## 8 கபிலரும் பாரிமகளிரும்

பாரி இறந்ததும் கபிலர் இறந்திருப்பார். ஆனால் பாரி அவரை அங்ஙனம் செய்யவிடாமல் தடுக்கவேயா லும் பாரியின் மகளிரிருவரையும் காப்பாற்றுவார் இன்மையாலும், அவர்களை மணஞ்செய்து கொடுக்கும் வரையில் தாம் உயிருடன் இருக்கவேண்டும் என்று அவர் தீர்மானித்துக் கொண்டார் அவர்களுக்குத் தக்க அறிவும் பெருமையும் உடைய கணவரைத் தேட நினைந்து, அவர்களை யழைத்துக் கொண்டு பறம்பு நாட்டை விட்டுப் புறப்பட்டார் புலவர். அவ்வாறு புறப்படும்போது பாரியை நினைந்து புலம்பினார்,

அவனது வள்ளன்மையை நினைந்து வருந்தினர், பறம்பு அரணைத் திரும்பித் திரும்பிப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் ஆறாய்ப் பெருக, ஆற்றொணாத் துயரால் உள்ளத்தினின்றும் பொங்கி யெழுந்த அன்புடைய பாடல்களால், பாரியையும் பறம்பு மலையையும் நாட்டையும் புகழ்ந்துகொண்டே சென்றனர்.

சென்று, ஓர் ஊரில் அன்றிரவு தங்கினர். அவ்விரவு நிலாத் தோன்றியது. அந் நிலவைக் கண்ட பாரி மகளிர், தாம் அதற்கு முந்திய நிலாக்காலத்தில் தமது அரணுள்ளே நகையோடு இனிதே வாழ்ந்ததையும், அடுத்த நிலாக் காலத்துத் தாம் தந்தையை யிழந்து, தங்கள் பறம்பையும் இழந்து, தமியராய்ப் பிறர் இருப்பில் தங்கி நின்றதையும் எண்ணி எண்ணி வருந்தினர். அவர்கள் மனமுருகி,

"அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேம், எங்குன்றும் பிறர்கொளார்,
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார், யாம் எந்தையு மிலமே"

என்று பாடிப் புலம்பினர்.

பின்னர், கபிலர் அம் மகளிரை யழைத்துக் கொண்டு பல நாடுகள் வழிநடந்து, 'இளவிச்சிக்கோ' என்னும் சிற்றரசனிடம் சென்றனர். அவன், 'நன்னன்' என்னும் வேளிர்குலத் தலைவனது வழித்

தோன்றும். அவன் கபிலரை வரவேற்றான். கபிலர் பாரிமகளிரை அவனுக்குக் காட்டி, "முகிலாலும் உச்சி யறியப்படாத உயர்ந்த மலைக்குத் தலைவ, நின்று குளிர்ந்த மலையினின்று ஓங்கிய பசிய இலையையுடைய பலாமரங்களின் பழத்தைக் கவர்ந்துகொண்டு கடுவன் சிவந்த முகத்தையுடைய தனது மந்தியுடனே சேர்ந்துவாழும் அப் பலாமரங்களை மிகவுடையாய் நீ, நிணத்தைத் தின்று களித்து நெருப்புப் போலும் தலையையுடைய நெடிய வேலினையும், களத்தைத் தன் தாக்கிக்கொண்டு வெருளும் சுழல்கண் யானையை யும், விளங்கிய மணிகளால் செய்யப்பட்ட வனைந்த ஆபரணங்களையும் உடைய விச்சிக்கோவே! மிக்க விளைதலையுடைய நாட்டையுடையோய்! போரில் பகைவேந்தர் பிடுக்கைப் படக்குபவனே! இம் மகளிர், கொடி முல்லை தன்னை நாத்தழும்பேறப் பாடாதிருந்தும் மணிகள் ஒலிக்கும் நெடிய தேரைக் 'கொள்க' என்று சொல்லிக்கொடுத்த வள்ளன்மை மிகச் சிறந்த வேள்-பாரியது பெண்கள். யான் பரிசிலன், அந்தணன்; நிலைபெற்ற அரசனான நீயோ பகைவரைப் போர் செய்யும் முறைமையால் பொருது தாழ்விக்கும் மேன்மையுடையோன் ஆதலால், நினக்கு யான் தருவதைக் கொள்வாயாக," என்றார்.

பாரிமகளிரைத் தன்னை மணஞ்செய்துகொள்ளு மாறு புலவர் வேண்டுகின்றார் என்பதை உணர்ந்தான் இளவிச்சிக்கோ. மூவேந்தர்க்கும் பகைவனான பாரியி

னுடைய மகளிரைத தான் மணநதால அகனுல எனன தீமை விளையுமோ எனறு பயநதான அவ வேள கபிலரை நோககி, "புலவீர, இப பெண மணிகளை யான மணநதுகொளள இயலாதநிலையில உளளேன" எனறு உறுதியாயக கூறினன

கபிலர, அம மகளிரை அழைததுககொணடு, கொடையாளிகளுள ஒருவனுன 'இருஙகோவேள' எனபவனை யடைநதார அடைநத புலவர அவ வளளலை நோககி, "மாலையையணிநத யானையை யுடைய இருஙகோவே, நீ, வடபககதது முனிவ னுடைய ஓமகுணடததில தோனறித துவாரபதியென னும படை வீடடையாணடு வளளனமையிற சிறநத நாறபததொனபது தலைமுறை தொனறு தொடடு வநத வேளகளுள வைததுப போறறததகுரியாய வெற றிப போரையுடைய தலைவ! புலிகடிமாலே! வானுற கவிககபபடடுப பெருஙகடல சூழநத இபபூவுலகததினா கண அணுகுதறகரிய வலிமையுடைய பொனனுண டாகும பெரிய மலைககுத தலைவ! வெறறிவேலைத தாஙகிய பகைவா அஞசும படைககும கேடிலலாத நாடடிறகும உரியவனே! எனனுடன வநதுளள இம மகளிர யாவெனறு வினவுவாயாயின, இவா தாம, ஊாகள எலலாவறறையும இரபபோாககு வழஙகித தேனா முலலைககொடிககு வழஙகியவனும, தொலை யாத நலல புகழையுடையவனும, பறமபிறகுத தலை

வனுமான பாரிவேளது பெண்கள் யான் இவர் பிதாவின் தோழன்; ஆதலால், இவர் என் மகளிர் ஆவர், யான் இவரை நினக்குத் தர, நீ இவரைப் பெற்றுக்கொள்வாயாக," என்று இருங்கோவேளது புகழையும் பாரிவேளது புகழையும் தாம் மேற்கொண்டுள்ள வேலையையும் கூறி, அப் பெண்களை மணந்து கொள்ளுமாறு வேண்டினார்.

இருங்கோவேளும், இளவிச்சிக்கோவைப் போல, மூவேந்தருக்கும் பயந்தவனாய், அம் மகளிரை மணக்க உடன்படவில்லை. அவன் உடன்படாததைக் கண்ட கபிலர் மனம் நொந்தார். அவர் மன வருத்தத்துடனே அவனை நோக்கி, "பெருமானே, புலவர் மனம் வருந்துமாறு அரசர் நடந்து கொள்ளல் ஆகாது, உன்னை யொத்த அறிவினையுடைய உனது குடியுள் ஒருவன், பெரும்புலவரான 'கழாத்தலையார்' என்பவரை அவமதித்தனன். அதன் காரணமாக, வெற்றி நிலை பெற்றுச் சிறந்த புகழோடு இருந்த சிறப்பையும் போரையம் என்னும் அவனது நாடு கெட்டுற்றது. என் வார்த்தையை நீ அவமதிக்கலாகாது. இம் மகளிர் 'வேள்-எவ்வி' என்பானது குடியிலே படுவார்களாக. பின்னை இவர் கைவண்மையுடைய பாரிமகளிர் என்று சொல்லிய எனது அற்ப வார்த்தையைப் பொறுப்பாயாக. பெரிய மலையிடத்து ஊர்களையுடைய நாட்டையுடையாய்! யான் நின்னை விடை கொண்டேன்," என்று கூறி அகன்றார்.

பாரிமகளிரது மணங்களைப் பற்றிப் பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். கபிலர் அம்மகளிரைப் பார்ப்பாரது பாதுகாவலில் வைத்துத் தீயில் விழுந்திறந்தனர் என்பார் சிலர், மூத்தவளான 'சங்கவை' என்பாளை மலையனுக்கு மணஞ்செய்து கொடுத்தபின்னர், இளையவளான 'அங்கவை'யைப் பார்ப்பாரது பாதுகாவலில் விட்டனர் என்பார் சிலர், இளையவளை அவ்வை மூதாட்டியார் 'தெய்வீகன்' என்னும் சிற்றரசனுக்கு மணமுடித்தனர் என்பார் சிலர். இவற்றை வைத்துக்கொண்டு நமது அறிவிற்கும், ஆராய்ச்சிக்கும் எட்டியவாறு கதையை முடிப்போம்.

கபிலர் பெருமான் சங்கவை, அங்கவை என்ற இருபெண்களையும் அழைத்துச் சென்று, திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டுவந்த மலையனை யடைந்தார். அவன் சிறந்த அரசன், வென்றி மிக்க வேந்தன். அவன் பாரியினது பரந்த புகழைக் கேள்விப்பட்டிருந்தான். ஆதலின், அவன் பாரியினுடைய மூத்தமகளான, சங்கவை என்பாளை மணந்து கொண்டான். அதன் பின்னர், கபிலர் இளையவளான 'அங்கவை' என்பாளைப் பார்ப்பார் சிலரது பாதுகாவலில் வைத்தார். வைத்தபிறகு, "இனி இவ்வுலகில் இருந்து பயன் என்? வீடு பேற்றை யடைதலே கருதி" என்று எண்ணினார். அவர் பெண்ணைநதியின் மத்தியில் தீயுண்டாக்கினார். அக்கினிப் பிரவேசமாகத்

தயாராக விருநத அவா, "மலைநாட்டையுடைய பாரி! பெரிய கைவண்மையை யுடையாய! நீயும யானும கலநது கூடிப்பிறநதுப பொருநத, யானும நினனுடன கூட வருவதறகு மனம இலலாமையாலே 'நீ ஈண்டுத தவிா' எனறு சொலலி இவவாறு மாறுபட்டனை யாதலால, நினககு யான பொருநதினவ னலலேன அதனால, நீ எனககு உதவிசெயத காலஙகளிலும எனனை வெறுத திருநதாய போலும. இவவாறு யான பொருநதின வன அலலேனாயினும, இப பிறப்பினைகண நீயும நானும கூடி இனபுறறு இருநதது போல, மறுபிறப்பிலும நினனோடு கூடி வாழககை ஊழ் கூட்டுக" எனறு மன முருகப்பாடி, வடககிருநது உயிா நீததனா

## 9 அஙகவை திருமணம

நலலிசை மெலலியாரான ஔவையாா ஒருகால திருககோவலூரை யடைநதாா அவா, பாரிவேள அடைநத அகால மரணததையும அவன மகளிாபட்ட துனபததையும அறிநதாா, இளையவளான அஙகவை யை யாருக்கேனும மணமுடிததுக கொடுககவேணடு மெனறு தீாமானிததாா

அக காலததில, அரசாணடிருநத 'தெயவீகன' எனனும அரசனை ஒருவனைத திருமணததிறகுச சம மதிககச செயதாா. அத திருமணததைச சிறபபாக நடததத வேணடுமெனறு ஔவையாா விருமபினாா.

அதனால் அவர், சேர சோழ பாண்டிய மன்னர்க்குத் தனித்தனியே திருமுகம் வரைந்தார். அவர்கள் பாரியின் பகைவராதலால், வாராதிருப்பரோ என்று எண்ணி, அவர்களை வருமாறு வற்புறுத்தினார்.

"சேரலர்கோன் சேரலன் செழும்பூந் திருக்கோவ
லூரளவுந் தான்வருக உட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள அரசன் மணமிசைந்தான்
சங்கியா தேவருக தான்."

என்று அம்மையார் சேரனுக்குத் திருமுகம் எழுதி அனுப்பினார். பின்னர் அவர்,

"புகார்மன்னன் பொன்னித் திருநாடன் சோழன்
தகாதென்று தானங் கிருந்து—நகாதே
கடுக வருக கடிக்கோவ லூர்க்கு
விடியல் பதினெட்டாம் நாள்"

என்று சோழ மன்னவனுக்குத் திருமுகம் வரைந்தனுப்பினார். அதன் பிறகு அம்மையார்,

"வையைத் துறைவன்! மதுரா புரித்தென்னன்!
செய்யத் தகாதென்று தேம்பாதே—கையறகு
வேண்டுவன கொண்டு விடியல்பதி னெட்டாநாள்
ஈண்டு வருக இசைந்து"

என்று மாட மதுரைப் பாண்டிய மன்னற்குத் திருமுகம் தீட்டி யனுப்பினார்.

ஔவையாரின் அருட்பாடலைக் கண்டதும் அவ்வம்மையை நன்கு அறிவாராதலால் அவர்

கட்டளைக்கு உட்பட்டு மூவேந்தரும் திருமணத்திற்கு வந்திருந்தனர். திருமணம் அணிபெற நடக்கையில் ஔவையார் பல தெய்வீகச் செயல்களை நடத்திக் காட்டினார். திருமணம் நடைபெற்றது. அங்கவை கணவனுடன் இனிது உறைவாளாயினள்.

இவ்வாறு, பாரிமகளிர் அல்லலுற்ற வண்ணம் கபிலர் ஒரு பெண்ணுக்கு மணம் செய்ததும், ஔவையார் ஒரு பெண்ணுக்கு மணஞ்செய்ததும் போற்றற்குரியன.

# II. வேள்—ஆய்

இவன் பொதியமலையின் தலைவன். அம்மலையை அடுத்த 'ஆய்குடி' என்பதே இவனது ஊர். ஆய் என்றும் அண்டிரன் என்றும், ஆய் அண்டிரன் என்றும் இவன் வழங்கப்பட்டான். இவனது மலை வேற்றரசரால் தாக்கமுடியாத அரணவலிமை யுடையது. இம்மன்னவன் சுரபுன்னைமாலையை யுடையவன்; யாதொரு பிரதிபலனையுங் கருதாது இரவலர்க்கு ஈயும் சீர்மையுடையோன். இவனது நாட்டில் 'கவிரம்' என்ற பெயருடைய மலைப்பகுதியில் பல இனிய சுனைகள் இருந்தன, அவற்றில் சூரரமங்கையர் வாழ்வதாக ஐதீகம் இருந்ததென்றும் அறியக் கிடக்கிறது.

"தெறுஅது, ஆஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
ஏர்மலர் நிறைசுனை யுறையும் சூர்மகள்"

—அகநானூறு.

மேலும், இந்த ஆய்நாடு யானைக் கூட்டங்களால் நிறைந்தது. ஆய் பரிசிலர்க்கு யானைகளை வரிசை வரிசையாகத் தந்துவந்தான். இவன் ஒருநாள் காட்டு வழியே செல்லுங்கையில், நீலநாகம் ஒன்று ஆயைக் கண்டவுடன் தேவன் விரும்பத்தக்க ஆடையொன்றினை விட்டு அகன்றதாகவும், அதனை ஆய் எடுத்து

வாந்தனாகவும் சொல்லப்படுகிறது. அவ்வாறு காட்டி-டையே நீலநாகத்தால் கிடைக்கப்பெற்ற சிறந்த ஆடையைத் தான் கொண்டுகொள்ளாது, அதனைச் சிவபிரானே அணியத்தக்கவர் என்று கருதி, அப் பெருமானுக்குப் பெரு மகிழ்ச்சியுடன் அதனை இவ் வள்ளல் சாத்தினன் என்று தெரிகிறது.

> "நீல நாகம் நல்கிய கலிங்கம்
> ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
> சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
> ஆர்வ நன்மொழி ஆய்"
>
> —சிறுபாணாற்றுப்படை

இவனைப் பல புலவர்கள் பாடியுள்ளார்கள் என்றாலும், அப் புலவரினும் ஆயைப் பெரிதும் புகழ்ந்து பாடியவரும், இவனது உயிர்த்தோழருமான 'முடமோசியார்' பாடிய பாக்களே பெரிதும் இன்பத்தைப் பயக்குவன வாதலானும், ஏனையோரது செய்யுட்களையும் விரிப்பின் அதிகம் பெருகுமாதலானும், மோசியாரையும் ஒரு சிலவையும் பற்றியே பெரிதும் ஈண்டுக் கூறுவோம்.

## 2 ஆயும் ஓடைகிழாரும்

ஆயின் கொடைச் சிறப்பைக் கேள்வியுற்ற 'ஓடைகிழார்' என்னும் பைந்தமிழ்ப் பாவலர் ஆய்குடியை

அடைந்தனர் வேலைக் கண்டு, தம் வறுமையினைத் தெளிவுறக் கூறனர். "பெரும, கிழிந்த ஆடையைப் பற்றி ஈரினது நிரையோடு தாங்குதல் மிகப் பேணிய பசையை ஒரு பகை என்று சொல்லுவேனோ? உண்ணாமையால் உடல் மெலிந்து விழிநீர் சிந்தி அழும் என்னது சுற்றத்தை வருத்தும் வறுமையை ஒரு பகை யென்பேனோ? இத்தகைய எனது நிலையை அறியாராய், 'நின் கைப்பொருளைத் தா' வென்று சொல்லி, எனது துயரத்தை மேன்மேலும் பெருக்கும் கொடிய ஆறலைக் கள்வர் அலைக்கும் பகையை ஒரு பகை யென்பேனோ? இத்தகைய பகையினை அறிபவன் ஆயே யெனக் கருதி, எனது வாக்கினால் நினது பெயரை வாழ்த்தி, நினது புகழை விரும்பி ஞாயிறு சுட்டபட்ட சுரத்தின்கண்ணே நடந்து உன்னிடம் வந்தேனென இவ்வாறு வறுமையால் வாட்டமுறும் என்போன்றவர்க்கு இடுவோ ரல்லவோ பயன் கருதாது பிறர்க்கு இடுவோரென்றும், எம்மை நீக்கிய பிறர்க்கு இடுவோர் பயன் கருதி யீவோர் என்றும் கொள்ளப்படுவர் நின் தகுதிக்கேற்ற பரிசில் ஆராய்ந்து ஈவாயாக குளிர்ந்த நீரையுடைய துறையூரின் ஆற்றுத் துறை முன்னர் உள்ள நுண்ணிய பல மணலினும் பல வாழ்நாட்களைப்பெற்று வாழ்தியென நின்னை வாழ்த்தி, நீ தந்த செல்வத்தை நாள்தோறும் மகிழ்ச்சியுடன் உண்போம்," என்று பொருள்பட்டுத் தக்க செந்தமிழ்ச் செய்யுள் ஒன்றினைப் பாடினர்

தமிழ்மொழியின் அருமையும் புலவர் பெருமையும் உணர்ந்த ஆய்வேள் பெருவகையடைந்து, புலவர் மனம் வெறுக்குமாறு பரிசில் நல்கினன். புலவர் பேரானந்தமுற்று ஆயை வாழ்த்தி அகன்றார்.

## 3 ஆயும் மோசியாரும்

இவர் பாண்டிநாட்டில் 'மோசி' என்ற குடியில் பிறந்தவர், அந்தண வகுப்பினர், முடவராயினமையின் 'முடமோசியார்' எனப் பெயர் பெற்றார். இவர் சோழன் 'கோப்பெருநற்கிள்ளி' என்பானால் ஆதரிக்கப்பட்டவர். உறையூர் நாட்டில் 'ஏணிச்சேரி' என்னுமிடத்தில் நெடுநாள் தங்கியிருந்தார். அதனால் இவர் 'உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்' என்று பெயர் பெற்றார்.

அம் மோசியார், வரையாது கொடுக்கும் வள்ளலாகிய ஆயினது புகழைக் கேள்வியுற்று, ஆயிடம் சென்று அவனது கொடையைப்பெற விரும்பினர். உடனே புலவர் ஆய் நாட்டை அடைந்தார். புலவரைக்கண்ட வேள், முகமன்கூறி அவரை வரவேற்றனன். ஆயினது நற்குண நற்செயல்களை முன்னரே கேள்வியுற்றவராகலின், புலவர் அவனை நேரில் கண்டதும் தாம் கேள்வியுற்றவை உண்மையெனவே அறிந்தார். அதனால் பெருமகிழ்வு கொண்டார், தம்மையும் அறியாது தம் உள்ளத்தெழுந்த கவிமொழிகளால் ஆயைவாழ்த்தினர்

"'நின் மலையானது புலி இயங்கும் குகைகளாகக் கொண்டது, உயர்ந்த சிகரங்களையும், ஏறிவருவதற்குக் கஷ்டமான வழிகளையும் உடையது. அவ்வழிகளில் ஏறுதலால் வருத்தமுற்று உடல்வளைந்து, தக்கடி வைத்து நடக்கின்ற மெல்லிய நடையை யுடையவளும் வளையலை யணிந்த கையை யுடையவளுமான விறலி என்பின்னே வர, பொன்னைக் கம்பியாகச் செய்தாற் போன்ற முறுக்கடங்கிய நரம்புகளை யுடையதும், வரிப்பாட்டு ஸ்வரஸ்தானங்கள் தோறும் மாறி மாறி ஒலி செய்வதுமான யாழை வழிபடுத்தலாலே தளர்வுற்ற நெஞ்சத்தோடு ஒரு பக்கத்திலே யணைத்துக் கொண்டு புகழ்தற்கு அமைந்த தலைமையையுடைய நினது நல்ல புகழை நினைத்து வந்தேன் யான்! எனது இறைவ!" என்று பாணன் கூறிய மாத்திரத்தே கன்றுகளுடனே உரல்போன்ற அடியினை யுடைய யானைகளை அணியணியாகச் சாய்த்துக் கொடுக்கும் வண்மைபொருந்திய மலையையுடைய நாடனே! பாணரும் புலவரும் கூத்தரும் நினது பொருள்களைத் தத்தமக்கென வளைத்துக் கொள்வாராகினும், நீ அவற்றை 'எம்முடையவை' எனக் கூறி அவரிடத்தினின்றும் மீண்டும் பெறுத அருங்குணம் வாய்க்கத்தனை அக்குணம் இனியும் அவ்வாறே நிலை பெறுக, பகைவரது மிக்க மாறுபாட்டை வென்ற வலும் வலிமையுடையவனும் யாவரும் ஒப்பப் புகழும் நாட்டை யுடையவனும், சிறப்புப் பொருந்தியவனு

மான ஆயே! உன்னிடம் யான் வந்தது யானை வேண்டியன்று, குதிரை வேண்டியன்று, தேரை வேண்டியுமன்று, நின்னைக் காணவேண்டு மென்ற விருப்பத்தாற்றான்!" என்று, அவனது நகைக் குணத்தையும், மலையின் பெருமையையும், தான் வந்த நோக்கத்தையும் நற்றமிழில் நன்கெடுத்துக் கூறினார்.

அப்பொழுது மோசியாரது அருங் குணங்களை ஆய்ந்து பார்த்து அவரிடம் பேரன்பு கொண்டான், அவர் வாக்கை வேத வாக்காய் மதித்தான், அவர் சொற்படியே எக் காரியத்தையும் செய்து வந்தான். ஆயது அருங்குணங்களைக் கவனித்த மோசியாரும் அவனிடம் நீங்கா நட்புக் கொண்டார், ஆயைக் காணு முன்னர் பல அரசரைத் தாம் பாடியதற்காகப் பெரிதும் வருந்தினார் ஏனெனில், பைந்தமிழின் பெருமையும், புலவர் அருமையும் ஆழ்ந்து நோக்குபவர் மிகச் சிலரே அச் சிலர் நல்லொழுக்கங்களையும் பாரிபோன்ற ஈகையும் உடையவர்களாயிருத்தல் வேண்டும் அவர்களை எத்துணைப் பாடல்களாலும் பாடிப் புகழலாம், அவற்றிற்கு அவர் அருகரே என்பது மோசியாரது எண்ணம்போலும் "இமயமலை வானளாவியது, குவளை மலர்களையுடைய பல சுனைகளையுடையது, அச் சுனைகளின் பக்கலில் தகரமரங்கள் குளிர் நிழலைப் பரப்புகின்றன, அம் மலையில் உறையும் கவரிமான்கள் நரந்தையையும் நறிய புல்லையும் மேய்ந்து, முற்கூறிய சுனைகளொன்றில் நீரைக் குடித்துத் தகரமர நிழலிலே

ணாங்கும் இயல்பை யுடையன். இத்தகைய திகழ்ச்சி யைக் கொண்ட இமயமலையை வடக்கேயும் தென் திசைக்கண் ஆய் குடியையும் பெற்றிராவிடின், இவ் வகன்ற உலகம் கீழ்மேலாகும். இத்தகைச் சிறப் புப் பொருந்திய ஆய்வேளை யன்றோ யான் முன்ன தாகப் பாடியிருக்கவேண்டும். இவனை விட்டு ஏனை யோரைப் பாடினேனே பாவியேன்! அவ்வாறு பாடிய குற்றத்தால் என்னு உள்ளம் அழிந்து போவதாக, ஆயையன்றிப் பிறரைப் புகழ்ந்த நாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக, அவன் புகழையன்றிப் பிற புகழைக் கூறக் கேட்ட என் செவியும் பாழ்பட்ட ஊரில் உள்ள கிணறுபோலத் தூர்வதாக,'' என்று கூறித் தம்மைத் தாமே நொந்துகொண்டார் புலவர்.

இதனால், ஆயிடத்து எத்துணைய பேரன்பு மோசி யார் கொண்டிருந்தனர் என்பது வெள்ளிடை மலை. மேலும், ஆயின் புகழ் அவன் காலத்தரசர் பெற்ற புகழினும் மேம்பட்டிருந்ததென்பது பிறிதும் இவ் வுத்தம வேளின் சிறப்புக்களை இப் புலவர் பெருமான் திருவாக்கால் யாவரும் அறியலாம்.

## 4. மோசியாரும் மலைவளமும்

ஒருநாள் மோசியார் ஆயின் ஆட்சிக்குட்பட்ட பொதிய மலையின் காட்சியைக் காணச் சென்றார். வானுற வோங்கி வளம்பெற வளர்ந்திருக்கும் மரங்

களின் வரிசையும், தெளிந்த நீர் அருவிகளின் நீர்ப்பெருக்கும், வானத்தை யளாவும் மலைக்கோட்டும் ஆயனாட்டை அணிபெறச் செய்தன வென்பது மிகையாகாது. இத்தகைய பொதியமலையின் இயற்கைத் தோற்றமும் வளப்பமும் புலவர் மனத்தைக் கவர்ந்தன. புலவர் தம் வசமிழந்து, "ஆ! இம் மலை வானளாவியது, இம் மலை யுச்சியில் முகில்கள் படிகின்றன, இங்குப் பலாமரங்கள் மிகுந்துள்ளன. பலாவின் கிளைகளில் மந்திகள் வசிக்கின்றன. அக் கிளைகளில் பரிசிலர் தூக்கிவைக்கப்பட்ட பிணிப்புப் பொருந்திய மத்தளங்கள் இருக்கின்றன. அவைகளைப் பலாப் பழங்களென்று எண்ணிய மந்திகள் அவற்றின் கண்களைத் தட்டுகின்றன. தட்டியவுடன் மத்தள ஓசை புண்டாகின்றது. அவ் வோசையால் அப் பலாவின்கண் வாழும் அன்னச் சேவல்கள் நடுக்கிட்டெழுந்து, மத்தள வோசைக்கு மாறாகக் கூவுகின்றன. இத்தகைய இயற்கை வளப்பினைக் கொண்டது இம் மலை. இச் சிறப்புவாய்ந்த மலையை யுடையோன் மலைபோன்ற தோள்களையுடைய எம் ஆயவேள். இம் மலையை ஆயிடத்துப் பாட வரும் விறலி அடையலாமே யன்றி, பெருமை பொருந்திய அரசர் அடைய முடியாது," என்று பொதியமலையின் பெருமையினைப் பாராட்டிக் கூறினார். இப் பாடலால், ஆய் என்பான் நாட்டின் வளமும் அவனது வலிமையும் புலப்படுதல் காண்க.

அம் மலைச்சாரலில் கூட்டங் கூட்டமாக யானைகள் வசிப்பதைப் புலவர் கண்டார், அவை எண்ணற்ற வகைகளாக மிகுந்திருக்கக்கண்டு ஆச்சரியம் கொண்டார். அவர், "களிறுகளை மிகுதியாகக்கொண்ட அழகிய இக் காடு, முகிலினம் சென்று உறங்கும் உயர்ந்த மலைக்குத் தலைவனும், சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியினை யுடையானும், கூர்மையான வாளினை யுடையானுமான ஆய் அண்டிரன் மலையைப் பாடி இக் களிறுகளைப் பரிசிலாகப் பெற்றனவோ?" என்ற பொருளை வைத்து,

"மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே"

என்று பாடி வியப்புறுகிறார்.

பிறகு, அவர் மலைநாட்டு மக்களான குறவர்களைக் கண்ணுற்றார். அவர்கள் செய்கையையும் யானைக் கூட்டங்களையும் சேர்த்துப் பின்வருமாறு கூறி, ஆய்வேளின் பெருமையினை நினைந்து வியக்கிறார். "இக் குறமக்கள் குறுகிய இறப்பையுடைய சிறிய வீடுகளில் வசிக்கின்றனர். பலாவின் பழத்தை வளைந்த மூங்கிற் குழாயில் வார்த்திருந்து, அது நன்றாக முதிர்ந்ததும் அதனைக் குடித்துவிட்டு வேங்கை மரத்தையுடைய முற்றத்தின்கண் குரவைக் கூத்தாடுகின்றனர். இனிய

சுளைகளையுடைய பழங்களைக்கொண்ட பலாமரங்கள் இம் மலைநாட்டில் அதிகமாகக் காணப்படுகின்றன. இத்தகைய வளப்பம் பொருந்திய மலைநாட்டை யுடையவர் ஆய் அவன் கொல்லுகின்ற போர்ப் செய்யுந் தலைவன் அவன் இரப்போர்க்குக் கொடுக்க யானைத்தொகை, விண்மீன்கள் எண்ணிக்கையினும் மேம்படுமேயன்றிக் குறையாது மாரிகாலாகிய ஆரத்தையுடைய ஆயே! நின்னையும் நின் மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு இனிய முகத்தோடு மனம் உவந்து நீ கொடுத்த யானைகளை யெண்ணினர், அவை, நீ கொங்கரை மேற்கட்டுக்கண்டே ஓட்டிய காலில் அவர் புறங்கொடுத்தோடிவிட்டுப் போன வேல்களினும் பலவா கின்றன. இவ்வாறு நீ எண்ணிறந்த யானைகளைப் பரி சிலர்க்குக் கொடுத்தும், இன்னும் கணக்கற்ற களிறுகள் உன் வசத்தே யுள்ளன. இவை இவ்வாறு மிகுந்திருப்ப தற்குக் காரணம் என்ன? நினது காட்டின்கண் உள்ள இளைய பெண்யானை ஒரு கருப்பத்துக்குப் பத்துக் கன்றுகளைப் பெறுமோ?"

இவ்வாறு, புலவர் கோமான் மலைநாட்டு வளப்பத் தைக் கண்ணுற்றுக் களிகொண்டு, ஆயின் அரமனை நாடி வருகையில் விறலி ஒருத்தியைச் சந்தித்தார். அவர் அவளை நோக்கி, "மெல்லிய இயல்பினையுடைய விறலி! நல்ல புகழையும், மழைபோன்ற வண்மையையும், அழ கிய தேரினையும் உடைய வேள் ஆயைக் காண விரும்பு

வாயாயின், மாட்சிமைப்பட்ட இனிது மணம் பெற்ற கூந்தல் பொதியமலைக் காற்றால் அசைய, பீலியையுடைய மயில்போலக் காட்சியுண்டாக நடந்து செல்வாய்" என்று கூறி யகன்றார்

## 5. ஆயின் கொடைச் சிறப்பு

ஒரு நாள் புலவர் பெருந்தகை ஆயின் வள்ளற் றன்மையை மேலும் விளக்குவான் வேண்டி, "ஆய் வேட்டைக்குச் செல்வன், வேட்டை முடிந்ததும் புலித்தோலை விரித்துக் கொண்டு வேட்டையாற் கிடைத்த முள்ளம் பன்றியின் தசை, சந்தனக்கட்டை, யானைமருப்பு ஆகிய இவற்றைக் குவித்து வைத்துப் பாடிவரும் பரிசிலர்க்குக் கொடுக்கும் பான்மை யுடையவன். இத்தகைய கொடைச்சிறப்புடையவன் ஆய் பெருவள்ளல்" என்னும் கருத்தமைந்த செழுமிய பாடலைப் பாடினர். பின்னர், "இப்பாரில் இம்மையில் அறங்கள் செய்தால், அவை மறுமைக்கு உதவு மென்று கருதிய பொருளை விலையாகக்கொடுத்து, அதற்குப் பதிலாக அறத்தைக் கொள்ளும் அறவணிகன் ஆயல்லன் அண்டிரன், அவனது கொடை, 'பெரியோர் செய்தவழி' என்று யாவருங் கருதும்படி அறச்செய்கையுள்ளில் பொருந்தியது" என்ற பொருள் அமைந்த,

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்,
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே"

என்று பாடினார்

## 6 ஆயின் இறுதி நிலை

இவ்வாறாகப் புலவர்களால் போற்றப்பட்டு வந்த ஆய்வேள், வறியோர்க்கே தன்பொருள் அனைத்தும் வழங்கி வறுமை யடைந்தான், சுருங்கக் கூறின், அவனது மனைவியின் மங்கல நாணைத் தவிர, அவனிடத்து எஞ்சிய பொருள் ஒன்றுமில்லை நாளடைவில் வறுமை மிகுந்தது வறுமையால் ஆய்வேளின் நாடு அழகு குன்றியது அரண்மனையில் வாழும் அவன் மனைவிமார் மகிழ்ச்சி யற்றவர்கள் அவன் முகமும் அகமும் பொலிவுடனே விளங்கின ஆய், நற்காரியத்திற்றான் தன் பொருள்களைச் செலவழித்தானே யன்றி வீண்காரியத்தில் பாழாக்கவில்லை யன்றோ?

ஆய்க்கு நேர்ந்த வறுமையை எண்ணி மோசியார் பெரிதும் துக்கித்தாரெனினும் ஆயை உற்சாகப் படுத்த வேண்டி, "களாப்பழம் போலும் கரிய கோட்டை யுடைத்தாகிய சிறிய யானையைக் கொண்டு பாடும் இனிய பாட்டில் வல்ல பாணர் பரிசில் பெற்றுப் போனார்களாக, களிறுகள் இல்லாத பக்கத்தையுடைய

வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
வார்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே ”

எனப் பாடினார். ஆயினது மரணத்தைக் கேள்வியுற்ற ‘குட்டுவன் கீரனார்’ என்னும் புலவர் பெரிதும் வருந்தினார். அவர் ஆயின் நற்குண நற்செயல்களை நினைந்து நினைந்து அருந்துயர் அடைந்தார். அப் புலவர், “களத்திற் கேற்ப நடக்கும் அசைந்த நடையையுடைய குதிரைகளையும் யானைகளையும் தேர்களையும் அழியாத புதுவருவாயைப் பெற்ற நாட்டையும் ஊர்களையும் பாடுவார்க்குக் குறைவறக் கொடுக்கும் ஆயாகிய அண்டிரன், தன்னுடைய உரிமை மகளிரோடே ‘காலன்’ என்று சொல்லப்படும் கூற்றினியால் கொண்டு செல்லப்பட்டுத் தேவருலகத்தை அடைந்தான். போதும் பொலிவிழந்த கண்களையுடைய ராயத் தம்மைப் பாதுகாப்போரைக் காணாது ஆரவாரிக்கும் சுற்றத்துடனே செயலற்று அறிவுடைய புலவர் வறுமைப்பிணியால் வாடுங்காலம் வந்து விட்டதே! இஃதோர் நிலை இருந்தவாறென்னே?” என்று கூறிப் புலம்பினார்.

---

ந்த இயற்கை யமைப்பினாலும், செயற்கை யமைப்பினாலும், எந் நகரத்தினும் சிறப்புற்றதென்றே கவிகள் கூறுவர். மேலும், அந் நகரக் காட்சி, பலர்க்கும் பார்வைக்குப் பொழுது போக்கையும் இன்பத்தையும் இடையறாது உண்டு பண்ணிய தென்னலாம். அக் காலத்தில் செல்வம், புகழ், கல்வி இவைகளில் மேம்பட்ட மக்களில் பெரும்பாலோர் அந் நகரில் உறைந்தனர்.

இவ்வாறு சிறந்து விளங்கிய நகரை ஆண்டு வந்தவன் 'அதியமான் நெடுமானஞ்சி' என்பவன். அவன் பட்டவிழ்ந்த நல்ல மலர்மாலையாகிய குளிர்ச்சி பொருந்திய மாலையை யுடையவன்; யாவரும் அஞ்சத்தக்க படையை யுடையவன்.

மேலும், இந்த அதியமான் போர் செய்கின்ற கருப்பு வில்லையுடைய வசந்த காலத்திற்குரிய மன்மதனைப் போன்ற சிறந்த அழகினை யுடையான், பெரிய மலையைப் போலும் மார்பினை யுடையவன், போர் செய்கின்ற கடலைப்போன்ற திரண்ட சேனையை யுடையவன், மாறுபட்ட மிக்க கோபத்தை யுடைய யானைபோலும் கோபத்தினை யுடையவன். இவன் மேகத்தினும் பன்மடங்கு அதிகமாகக் கொடுக்கின்ற வளம் பொருந்திய கையை யுடையவன். இவ் வள்ளல் கருணைக்கு இருப்பிடமானவன், நல்ல குணமாகிய பயிரினது வேலியாக ஒப்பிடப்படுபவன். இவன்

ஏனைய பகை அரசர்களாகிய யானைகளுக்கு ஆண் சிங்கம் போன்றவன், சேரமானது உறவினன், சிற்றரசரையும் பெருவேந்தரையும் அநேக போர்களில் வென்றி கொண்டவன். இவன் பெயர் 'அதியமான் நெடுமானஞ்சி' எனவும், 'நெடுமானஞ்சி' எனவும், 'அஞ்சி' எனவும் வழங்கும்.

## 2. அஞ்சியும் பெருஞ்சித்திரனாரும்

அஞ்சி என்பான் தகடூரை யாண்டு வருங்கால், 'பெருஞ்சித்திரனார்' என்னும் பைந்தமிழ்ப் புலவர் அவனைப் பாடிப் பரிசுபெற விரும்பினர். அவர் தம் ஊரைவிட்டுத் தகடூரை அடைந்தார். அடைந்தவர் அஞ்சியைக் காணுதற்குப் பல நாள் காத்திருந்தனர். வறியார்க்கு ஈதலே தன் தொழிலாகப் பெற்ற அக் கொடைவீரன் யாது காரணத்தாலோ பரிசில்வேண்டிக் காத்திருந்த புலவர் பெருமானை நேரில் வந்து காணவில்லை. அவன் அவரது வருகையை யுணர்ந்து, தன் ஏவலர் மூலமாகப் பரிசிலைக் கொடுத்துப் புலவர்க்கு அனுப்பும்படி செய்தான். புலவர்,

"முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே"

என்ற மனப்பான்மை யுடையவ ராதலின், அஞ்சியின் செயலை வெறுத்தார். அவர் பரிசில் கொணர்ந்தானை நோக்கி, "யான் குன்றுகளும் மலைகளும் பல கடந்து

தார். அவர் இளமையிலேயே நற்றமிழை நன்முறை பயின்று நல்லிசைப் புலவராய் விளங்கினார். அவர் பல சிறப்புற்ற தமிழ் மன்னர்களைப் பாடச் சென்று கவிபாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தனர். ஔவையார் அஞ்சியின் நற்குண நற்செயல்களைக் கேள்வியுற்றார்; அவனைக் காணவேண்டும் என்னும் அவா பிடர்பிடித்துத் தள்ள, அவர் தகடூரை அடைந்தார். அடைந்த அம்மையார் அவனைக் கண்டு, "பெரும! இரப்போர்க்குத் தாயும் மடவார் மகிழ்நனே நெடுமானஞ்சி! கடலால் சூழப்பட்ட இந்நிலவுலகத்தில் வறுமையால் வாட்டமுற்றோர்க்கு வேண்டுவ தருநீ எனக் கேட்டேன். யான் சேரநாட்டில் பாணர் குலத்திற் பிறந்தவள்; என் பெயர் ஔவை என்பது. யான் வறுமைப் பெருந்துயர் உழந்தேன்; நீ மனம் உவந்து இசைந்து கொண்டு இக்கணம் தளிப்பாய்" என்று, தன் வறுமையினையும் அவனது பெருமையினையும் பல பாடல்களால் வெளிப்படுத்தினர்.

அஞ்சி என்பவன், அம்மையாரின் புலமையையும் ஒழுக்கத்தினையும் உயர்த்துணர்ந்து பெருமகிழ்வு கொண்டனன்; அவருக்கு இன்சுவை யமுதை இன்பொடு ஈந்தனன். "பரிசில் கொடுத்துவிடின் இவர் இவணைவிட்டேகுவர்" என்று எண்ணி, அவரைப் பிரிய மனமற்றவனாய்ப் பரிசில் அளிக்காது காழ்த்தினன். அம்மையார் சின்னாள் அவனது அரண்மனையில் தங்கியிருந்தனர். அவன் பரிசில் கொடுக்கவில்லை. அம்மையார் சினங்

பணிவுடன் தன்னை மன்னிக்குமாறு வேண்டினன். பின்னர், அருசி அம்மையாரைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று அறுசுவை யுண்டி அன்புடன் அளித்துப் பரிசில் பல நல்கினன்.

அவனது தளராக் கொடைத்திறத்தைக் கண்ட அவ்வையார் அகமிக மகிழ்ந்தார் "அந்தோ! அதியமானது கொடைத்திறத்தையும் தண்ணளியையும் அறியாது, யான் முனிவு கொண்டேனே" என்று இரங்கினார் பின்னும் அவர், தம் உள்ளத்தோடு சொல்பவராய், "அதியமான் அணிகலம் அணிந்த யானையையும் இயன்ற தேரையும் உடையவன் அவன், ஒருநாள் அல்ல, இருநாள் அல்ல, பல்நாளும் பயின்று பலரோடு சேர்ந்து செல்லினும் முதல் சென்ற நாளில் எத்தகைய விருப்பம் காட்டியுடையவனாக இருப்பானோ, அத்தகைய விருப்பமே யுடையவன் அவன் பரிசில் நீட்டிப்பினும் நீட்டியாதொழியினும், 'யானை தனது கந்தங்களிடையே வைக்கப்பட்ட கவளம்போல' அப் பரிசில் நமது கையகத்ததே, அது தப்பாது, உண்ணுதற்கு இச்சித்த நெஞ்சே! நீ பரிசிற்கு வருந்தவேண்டா, அவன் தாள் வாழ்வதாக" என்று, அவனது மனப்பான்மையையும், அவன் பரிசில் தாராதொழியான் என்ற உறுதியையும், தாம் அவனிடத்துக் கொண்டுள்ள அன்பையும் வெளிப்படுத்தினார்.

ஒரு நாள் அவ்வையார் தகடூரைச் சுற்றிப்பார்த்து
மலைவளப்பத்தைக் கண்டு மகிழ்ந்தார். அப்போது விறலி
ஒருத்தி மத்தளத்தை யெடுத்துக்கொண்டு அவ்வழியே
சென்றுகொண்டிருந்தாள். அவளைக் கண்ணுற்ற அவ்
வையார், "சிலவாகிய வளையலையுடைய விறலி! பல
வேற்படையையுடைய எம் அண்ணல் அதியமான்
சேய்மைக்கண்ணன்று; அல்லன் உலகம் முழுவதும் வறு
மையுற்றலையுடைய காலமாயினும், நீ அவன்பாற்
போவையானால், நினைப் பாதுகாக்க வல்லவன்
அவன்; அவனே சிறந்த கொடை வீரன், தண்ணளி
நிறைந்த அண்ணல்" என்று கூறிப் போந்தார்.

இவ்வாறு அவ்வையார் அதியனின் அரிய குணங்
களை எந்நேரமும் நினைந்து நினைந்து, தம் உள்ளக்கி
னின்று ஊறி எழுகின்ற செந்தமிழ்ப் பாவால் செம்மை
யுற எடுத்துப்பாடும் தொழிலையே மேற்கொண்டிருந்
தார். அந்த அஞ்சியை விட்டுச் செல்ல அவர் மனம்
இடந்தரவில்லை. அம்மையாரை விட்டுப் பிரிய அஞ்சி
யும் உடன்பட்டானில்லை. அவர் இல்லாத அவைக்
களம் தாமரை யற்ற தடம்போலும், கண்ணிலார் வத
னம் போலும் பொலிவற்று விளங்கும் என்று அஞ்சி
என்பான் எண்ணினான். அவ்வையாரும் தம் புலமை
யாலும், ஒழுக்கத்தாலும் அஞ்சியின் அன்பைக் கவர்ந்
தார். அவனுக்கு உயிர்க்குயிரே போன்ற அமைச்சராக
வும் விளங்கினார் அவ்வையார்.

## 4 அஞசி, நெல்லிககனிபெறறு அவவைககீதல

ஔவையார பாடும இனிய பாடலகளைக கேட்டுப பேரானநத முறறிருநத அஞசி, ஒரு நாள ஒரு மலை பககததுககுச செனறிருநதான, அம மலையில கரு நெல்லி மரம ஒனறைக கணடான. அம மரததிலபழுதத நெல்லிககனியொனறு இருநதது, அதனை அரிதின முயனறு பெறறான பெறற வேநதன, "இதனை உண போர நெடுங்காலம உயிர வாழவர் எனறு சொல்லக கேட்டுளளேன எனறாலும, இதனை உணடு நெடுங காலம உயிரவாழ எனககு விருப்பமில்லை. உலக மககளுககுப பெரிதும பயனபடுவோரே இக கனியை யுணடு நீடு வாழவது தகுதியேயனறி, உலகிறகு ஒரு சிறிதும பயனபடாத நாயேன இதனை உணடு, நீணடகாலம நடைபிணமாகத திரிவதிற பயன என்ன? இதனை யாருககு ஈயலாம?.. சரி, நமது நாவனமையால அரிய பெரிய பாககளை யியறறி உலகைத திருததும ஔவையாருககே ஈவேன, அவரே இதனைஉணணத தககவர்" எனறு தனககுளகூறி முடிவு செயது கொணடான. பினனர், தன அரணமனையை யடைநது அபபெருமான ஔவையாருககு அக கனியின ஆறறலைக கூறுமலே கொடுததான. அவவை யார அதனைத தினறார. உணபோருககு உடனே வலி மையைத தரததககக கனி யாதலால, அதனை உணடதும

அம்மையார் தாம் ஏதோ புதிய பலம் பெற்றதாக எண்ணினார்; பின்னர் உண்மையை யுணர்ந்தனர்; தன்னினும் தம்மை மேலாக மதித்த அஞ்சியின் அருங் குணத்திற்கும் செயலுக்கும் வியந்தார். அவர் அந்த அஞ்சியை நோக்கி, "வெற்றியுண்டான கப்பாக வாளை யெடுத்துப் பகைவர் போர்க்களத்திலே பட வென்ற வீர! கழலைவிடப்பட்ட வீரவளை பொருந் திய மன்ன! பெரிய கையினையுடையாய்! கோமானே! மாற்றாரைப் போரின்கண் கொல்லும் வீரச் செல்வத்தினையும் பொன்னால் செய்யப்பட்ட மாலையினையும் உடைய அஞ்சி! நீ இளம்பிறையைச் சடையிலே தாங்கியவனும் நீலமணிபோலும் கரிய மிடற்றினையுடையவனுமான சிவபெருமானைப்போல நிலைபெற்று வாழக்கடவாய், பெரிய மலையிடத்து விடரின்கண் அரிய கருநெல்லியின் இனிய பழத் தைப் பெற்றும் அதனை உண்டு அதனாற் பெறும் பய னையும் பொருட்படுத்தாது, அப்பேற்றினை எமக்குக் கூறாது உண்ண அளித்தனை, நின் செயல் சாலவும் வியக்கத்தக்கதே" என்று அருளோடு கூறி மகிழ்ந் தார். மேலும், அம்மையார் அவனைப் புகழ விரும்பி, "மன்ன! நீர்த்துறையில் படிகின்ற யானையின் கோடுகளைச் சிறுவர்கள் கழுவுகிறார்கள், அச்செயலால் அந்த யானை அச்சிறுவர்கட்கு எளிதென்று கூறமுடி யுமோ? முடியாது, அதுபோல, எங்கட்கு எளியனாய் விளங்கும் நீ நின் பகைவர்க்கு எளியனாவையோ?

பெரும்! நீ நின் பகைவர்க்கு இன்னாய்" என்று, அவனது எளியனாந்தன்மை, வீரம் முதலியன விளங்கப் பல கவிகள் பாடினர். அஞ்சி என்பான் அவற்றைக் கேட்டு இன்புற்றிருந்தான்.

## 5. அவ்வையும் தொண்டைமானும்

அஞ்சி தகடூரை யாண்டு கொண்டிருந்தகாலை, 'தொண்டைமான்' என்னும் அரசன் காஞ்சி நகரத்தை யாண்டு வந்தான். அம் மன்னனும் படை வலி பெற்றவன். அவன் அஞ்சியைத் தன்னினும் மெலியான் என்று எண்ணி, அவன்மீது போருக்கெழ விரும்பினன். அச் செய்தியை யுணர்ந்தான் அஞ்சி. "எனது நாடு, கானானும் மலையானும் உடையதென்பதை அக் காவலன் கருதவில்லை போலும், அவற்றைக் கருதாவிடினும் என்னுடைய தோள்வலியும் என்னுடைய வாள்வலியும் கருதினனோ? அவற்றையும் அவன் கருதவில்லை என்று தெரிகிறது. அவன் தன்னுடைய பேதைமையினால் என்னை எளிதாகக் கருதிவிட்டனன் போலும்; நன்று, நன்று அவன் என்மீது போருக்கு வந்தால் தோல்வியுறுவான் என்பது திண்ணம். அவனைப் போருக்கு வாராது தடுப்பதே சிறந்தது. எனது ஆற்றலையும் எனது படை வலியையும் அவன் உணர வேண்டும். அவனுக்கு நன்கு உணர்த்த வல்லார்

யாவர் நம்மிடம் உளர்? நன்று, நல்லிசை மெல்லிய ரான நமது ஔவைப் பிராட்டியாரையே காஞ்சிக்கு அனுப்புவோம்" என்று துணிவு கொண்டான், தன் எண்ணத்தை அம்மையாருக்கு அறிவித்தனன். அம்மை யாரும் அவன் கருத்திற்கு உடன்பட்டுக் காஞ்சி நகரை அடைந்தார்.

தொண்டைமான் ஔவையாரை அன்புடன் வர வேற்றான், அறுசுவை யுண்டியை அன்பொடு அளித் தான். ஔவையார் கேவலம் தூதாக வந்தவரே யன்றி நல்லிசைப் புலவராயும் விளங்கினமையால், தொண்டைமான் அவரிடத்துப் பேரன்பு கொண் டான். அவன் அம்மையாரை அழைத்துச் சென்று அரண்மனைக் காட்சியைக் காட்டினன், பின்னர், தனது படைவலியை அம்மையாருக்கு உணர்த்த விரும்பி, அவரைப் படைக்கலக் கொட்டிலுக் கழைத்துச் சென்றான். நிரை நிரையாகப் பல் வகைப் போர்க்கருவிகள் வைக்கப்பட்டிருந்தன. அவை, வெகு சாக்கிரதையாகவே பாதுகாக்கப் பட்டு வந்தன. தொண்டைமான், தன்னிடத்தே படைவலி அதிகம் இருப்பதாக எண்ணி மமதை கொண்டுள்ளான் என்பதை யுணர்ந்த அம்மையார் அவனது செருக்கை யடக்க விரும்பினர், விரும்பி, அவனை நோக்கி, "வேந்தே! இக் கொட்டிலில் உள்ள ஆயுதங்கள் போர்த்தொழில் இன்மையால், பீலியணி

யப்பட்டு மாலை சூட்டப்பட்டுத் திரண்ட வலிய காம்பு அழகுறச் செய்யப்பட்டு நெய்பூசி, காவலையுடைய இவ்வாரணமனைக்கண் உள்ளன. செல்வம் உள்ள தாயின் உணவு கொடுத்தும், இல்லையாயின் தனக்கு உள்ளதனைப் பலரோடும் கூட்டுண்ணும் வறியோர்க்குச் சுற்றத்தலைவனாகிய தலைமையுடைய எம் வேந்தன் அதியமானுடைய கூரிய ஆயுதங்கள் போரில் பகைவரைக் குத்துதலால் கங்கு நுனியும் முரிந்து கொல்லன் வேலைசெய்யும் கொட்டிலிலே யுள்ளன" என்ற கருத்தமைத்துப் பாடினார். இதில் அவர், அதியனை இகழ்ந்தது போலப் புகழ்ந்தும், தொண்டைமானைப் புகழ்ந்தது போல இகழ்ந்தும், குறிப்பால் அதியினது வீரம் தொண்டைமானது வீரத்தை விடச் சிறந்தது என்பதைத் தெரிவித்தும் நோக்கற்பாலன இவையாகும், அம்மையாரின் சமயோசித அறிவும், தளரா மனமும், தைரியமும், அதியினிடத்துக் கொண்டிருந்த கரைகடந்த அன்பும் புலப்படுகின்றன.

ஔவையார் உரைத்தவை கேட்டனன் தொண்டைமான். அவன் அவரை நோக்கி, "ஒளி தங்கிய நுதலினையுடைய விறலி! என்னோடு போர் செய்ய வல்லவர் உளரோ நாடு பெரிய இடமகன்ற நாட்டின்கண்?" என்று வினவினன். அதுகேட்ட ஔவையார் "அரசே! நீ போர் செய்யக் கருதுவையாயின்,

எமது நாட்டின்கண்ணே அடிக்கும் கோளுக்கு அஞ்சு சாது எதிர்கண்டும் பாம்பு போன்ற இளைய வீரரும் உளர், அவரே யன்றி, மன்றின்கண் தூங்கும் பிணிப்புப் பொருந்திய முழவின் தாரையடிக்கலால் எழும் ஓசையைக் கேட்டமாத்திரத்தே, அது போர்ப்பறை என்று எண்ணி மகிழும் என்னுடைய தலைவன் அதியமான் நெடுமானஞ்சியும் உளன்" என்று பெருமிதத்தோடு கூறினர்

பின்னர், அம்மையார் அவனிடம் விடைபெற்றுத் தகடூரை யடைந்தார், காஞ்சியில் நடந்த செய்தியை அஞ்சிக்குத் தெரிவித்து வெடுத்துக் [illegible] இருந்தனர்

## 6. கோவலூர் யுத்தம்

மேற்கூறிய செய்தி நிகழ்ந்த சிறிது காலத்துக்குப் பின்னர், திருக்கோவலூரை யாண்டு வந்த 'மலையமான் திருமுடிக்காரி' என்பான் பல சிற்றரசர்களைப் போரில் வென்று வெற்றிகொண்டு, தன்னை வெல்ல வல்லார் ஒருவரும் இலர் என்று மமதைகொண் டிருந்தான் அதனை யுணர்ந்தவன் நெடுமானஞ்சி, அவனது செருக்கை யடக்கவும் தனது புகழைப் பரப்பவும் விருப்பங் கொண்டான், நால்வகைப் படைகளையும் திரட்டினான், திரட்டி, இரைவேட்ட பெரும் புலிபோலப் பகைவன் மீது போர் செய்யச் சென்றான், திருக்கோவலூர் மதிலை வளைத்தான், அந் நெடுமா

னருசி தனது மதிற்புறத்தே போர் செய்ய வந்துள்ளான் என்பதை யுணர்ந்தான் 'காரி' உணர்ந்ததும் அவன் வெந்தறுக்கண் வெகுளியினால் வெய்துயிர்த்தான், "ஆ! ஆ! இந்த அருசிக்கும் இவனது தண்டினுக்கும் எளியேனோ யான்?" என்று வெகுண்டு கூறி, தடம் புயங்களைக் குலுக்கி நக்கான். பின்னும் அக் காரி, "நன்று, நன்று,

முழைக்கணின் வாளரி முகத்தெதிர் தெனக்களிறு
முட்டியெதிர் இட்டி வருமோ?

வெகு நன்று, என்து வலியை முற்றும் உணர்ந்தும் இந்த அருசியென்பவன் யாதும் அறியாதவன்போல என்னை எதிர்க்க வந்தது வியக்கத்தக்கதே, என்னை நினைப்பளவில் வெல்லல் எளிதென்று எண்ணினன் போலும்" என்று கூறித் தனது சேனைத் தலைவரை நோக்கி, "வேழம், இரதம், புரவி, வெம்படைஞர் என்றினைய நாற்படையொடு விரைந்து சென்று அருசியை அஞ்சாது எதிர்த்துச் சமர் தொடங்குக" என்று கூறினன். பின்னர், அவனும் போர்க்கோலங் கொண்டு, தன் புரவிமீதிவர்ந்து சென்று கடும்போர் புரிந்தான்.

அருசியும் தனது தோள்வலியையும் வாள் வலியையும் காட்டினன். பகைவர் சேனையாகிய ஆழ்ந்த கடலிலே அருசி யென்னும் மரக்கலம் ஓடிற்று. அருசி பகைவீரர்களை வீழ்த்துருட்டினான், யானை

களையும் தோள்களையும் அடையப் பிடித்துக் குடி மறச் சேனை
யைச் சின்னாபின்னமாக்கினான், தேர் மேலும், பரிமே
லும், வெண்கோட்டுக் கரிமேலும், காலாட்கள் கம்
மேலும், அம்புகளைக் கண்டு விலகியோடாத வீரர்கள்
மேலும் வெகு சரங்களை அசராது பொழிந்தான். அஞ்
சியின் போர்த்திறத்தைக் கண்டு காரி பெருவியப்
பெய்தினான். அவனது படை நிலை கலங்கியது,
வீரர் மனங் கலங்கினர்.

இக் காட்சியைக் கண்ட ஔவையார் ஒருபுறம்
மகிழ்ச்சியையும் ஒருபுறம் துக்கத்தையும் அடைந்தார்,
அஞ்சியது போர்த் திறத்தைக் கண்டு களித்தார்.
அஞ்சியோடு வீணே போர்செய்து, தன் படையை
நாசமாக்கும் காரியினது அறியாமைக்குப் பெரிதும்
மனம் வருந்தினார், அஞ்சியது ஆற்றலை அவனுக்கு
எடுத்துக் கூறிப் போரை யொழித்து அஞ்சிக்கு அடங்
கிப்போமாறு கூற விரும்பினார். அவர் காரியையும்
அவனது படையும் நோக்கி, "எம் வேந்தன்
போர் செய்தற்குப் புடைபெயர்ந்து, உலாவி, திரும்பி
உறையகழித்த வாள்கள், பகைத்தோரது உடலின்
தசையின் கண்ணே முழுகிப் பதிந்து வடுப்பட்டு வடி
விழந்தன. அவன் வேல்கள், குறும்பர் சேர்த்த
அரண்களை வென்று, அப் பகைவரது நறிய மதுவை
யுடைய நாட்டை யழித்தலால் சுரையோடு பொருந்
திய காம்புடனே ஆணி கழன்று நிலை கெட்டன

அவன களிறுகள கவசபபாரததால தடுககபபடட கதவைப பொருது பகைவரது அரணை யழிததலால பெரிய தநதஙகளிற கடடிய பூணகள கழனறன அவன பரிகள, பாநதுவநது போரசெயத வீரரது பொனனூற செயயபபடட பசியமாலையையுடைய மாரபு உருவழியுமபடி ஓடி உழககுதலால இரததக கறைபடட குளமபுகளை யுடையவாயின அருசியோ, நிலவுலகததைக கனலுளளே யடககும கடல போனற படையையுடையவன, பொனனால இயனற தமபைக கிணகிணியையுடையவன, கழலவடிவாகவும, கிணகிணி வடிவாகவும செயது செறிதத கணைகள துணிக்க கேடயததை யுடையவன போரககளததில அவனால வெருளபபடடோர பிறர இகல எஙகே யுளர? செலவளம் மிகுநத உஙகளுடைய ஊர்கள உஙகட்கு உரிததாக வேணடுமெனறு உனனுவீராயின, அவனுககுநீர திறை கொடுககவேணடும அவவாறு திறை கொடுகக நீர மறுபபீராயின, அதறகு அவன உடனபடுபவன அலலன அவனது வீரததை யான எடுததுககூறியும நீர தெளியீராயின, நீஙகள உஙகள உரிமை மகளிரது தோளைப பிரிநதுறைதல வியபபனறு ஆகலின, அதனை யோசிததுப போர செயயுமின, இனனும வேணடுமாயினும எஙகள மாபெரு வேநதனாகிய அருசியின் ஆறறலை அறைகுவன கேணமின, ஒரே நாளில எட்டுத தேரைச செயயும தசசன

ஒருமாக்கக் கூடிக் கருதிச் செய்யப்பட்டதோ? நோக்காலே யொப்பன எங்கள் மன்னன்" என்று இவ்வாறுக அஞ்சியின் தனிப்பட்ட ஆற்றலேயும், அவன் படைவலியையும் தெளிவுறப் பகைவர்க்கு எடுத்துக் கூறினர்

அம்மையார் இத்துணை எடுத்துரைத்தும் காரி, போர் செய்தலில் பெரு விருப்பங் கொண்டவனுதலின் போரை நிறுத்தாது பொருதான் மிகைபடக்கூறியென்? காரியின் படை பறிந்தது. காரியும் அஞ்சிக்கு ஆற்றது அஞ்சியோடினன் கோவலூர், அஞ்சா வெஞ்சமப் படைத்த அஞ்சியது ஆட்சிக்குட்பட்டது அவனது போர்த்திறத்தைக் கண்ணுற்ற பாணர் எனும் பெரும்புலவர் அவனைப் பலவாறு புகழ்ந்து போற்றினர் அம்மையாரும் அகமகிழ்ந்து அஞ்சியை நோக்கி, "உன்னுடைய முன்னேர்கள் தேவர்களைப் போற்றி வழிபட்டனர், அத்தேவர்களுக்கு வேள்வியகண் அவியை அருந்துவித்தனர் அவ்வளவுமல்ல, அவர்கள் பெறுதற்கரிய கரும்பை விண்ணுலகினின்றும் மண்ணுலகிற்குக் கொணர்ந்தனர், கடலுக்குட்பட்ட இவ்வுலகின் கண்ணே சக்கரத்தை நடாத்தினர். நீயோ, பொன்னுற் செய்யப்பட்ட வீரக்கழல் புனைந்த காலினையுடையை, பெரிய பனம்பூ மாலையை யணிந்துள்ளாய, பூ நிறைந்த காவினையுடையாய, ஈரம்புலராத புலாலையுடைய நெடிய

வேலினையுடையை ; பிறவேநதரது கொடி முதலிய அடையாளஙகளைப பெறறுளளாய ; நாடுகளையுடைய ஒரு நாளும நீஙகாத அரசவுரிமையைத தடையினறுகப பெறறுளளனை , இவறறுடன அமையாது, புதிய போரை விருமபி ஏழு அரசரோடு பகைகது, அவருடன போரசெயது வெறறி பெறறாய , அவவாறு வெறறிபெறற அநத நாளினும பாடும புலவாககுப பாட முடியாத அடஙகாப புகழையுடையவனாய , நீ மாறுபாடுமிகக கோவலூரை யழிதத இறறைநாளும நினது வலிமிகக தோளைப பாணன தன புலமைப பெருவலியாற பாடினன " என்று கூறி, புலவராலும பாடிப் புகழ முடியாத அஞசியது ஆறறலையும, பகை வென்ற திறதகையும, பாணரது கவிபாடும ஆறறலையும ஒருஙகே வைதது புகழநதுரைததார.

இவவாறு அஞசி கோவலூரை வெனறு, தனது அரசாடசிக குடபடுததிய பினனர, ஔவையாருடன மீணடு, தனது அரசிருககையான தகடூரை யடைநதான

## 7 புததிரப பேறு

அரசனுககு இருகக வேணடிய அருஙகுணஙகள அனைததினையும பெறற அணணல அஞசி, புததிரப பேறினறிய பெரிதும வருநதினனன குடுமபம எனனும மாதிறருக குழநதை கொழுநகனியனறோ ? எநத

ளைத் துன்பங்கள் இருப்பினும் குழந்தையைக் கண்ட அளவில் அவை, 'வெயிலைக் கண்ட பனிபோல்' நீங்குகின்றன. இல்வாழ்வார்க்கு இம்மைச் செல்வங்களிற் சிறந்தது மக்கட் பேறென்றே. அப்பேற்றினைப் பெற்றவன் இம்மை மறுமை இன்பங்களைப் பெறுகின்றான். இத்தகைய இன்பம் உயிர்கட்கெல்லாம் ஒரு தன்மையாகவே அமைந்திருக்கிறது.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை, யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்ற நாயனார் வாக்கு சிந்திக்கற்பாலது. குழந்தையில்லா மனை பாழிடமே யாகும். குழந்தைகள் தம் சிறிய கைகளால் துழாவப்படும் சோறானது, சுவையில் தேவாமிருதத்தைவிட மிகவும் இனிமையைப் பயப்பதாகும். தந்தை தாயார் தம் குழந்தைகளுடைய மெய்யைத் தீண்டுதலால் உடலின்பம் பெறுகிறார்கள், அவர்களுடைய மழலைச் சொற்களைக் கேட்பதால் செவியின்பம் பெறுகிறார்கள். இவ்வாறு புதல்வர் இல்லாமனை குபேர சம்பத்துடன் இருப்பினும், குட்டிச் சுவரே யாம். துறவிகளும் மக்கள்மேல் உள்ள காதலைத் துறக்கவல்லரல்லர், எனின், அக் குழந்தைகளைப் பெறுதலால் உண்டாகும் இன்பத்தைச் சொல்லவும் வேண்டுமோ?

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி,

இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து(ம்),
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழும் நாளே"

—புறநானூறு

'பண்ணிலாப் பாடல் போலும், பரிவிலா நட்புப் போலும்,
உண்ணிலா நெய்யிலாமல் உண்டிடும் அடிசில் போலும்,
பெண்ணிலா இல்லம் போலும், பெயரிலா வாழ்க்கை போலும்,
கண்ணிலா வதனம் போலும் கான்முளை யில்லா இல்லம்"

—மாயூரத்தலபுராணம்

இவ்வாறு, மக்கட்பேறு மிகச் சிறந்ததாக விருக்க, இப்பேற்றினை நெடுங்காலம் பெற்றானில்லை அதியமான் ஆனால், ஒளவையார் அவனை வந்து அணுகிய பின்னர், அவனது மனைவி கருவுற்றாள் அவள் சூல் கொண்டிருக்கையில் அஞ்சி கோவலூரை எதிர்க்கான், வென்றி கொண்டு வேந்தன் மீண்டும் தகடூரை யடைந்தபோது அரசி ஆண்குழந்தை யொன்றினைப் பெற்றிருந்தாள் அந்தச் செய்தியைக் கேட்டான் வேந்தன்; நகரில் நுழைந்தவுடன் போர்க் கோலத் துடனே ஒளவையாரொடு அந்தப்புரஞ் சென்றான்; சென்று, பிறந்திருந்த ஆண்குழந்தையைக் கண்டான்; உள்ளத்தில் ஒருவராலும் கரை செய்ய அரியதொரு பேருவகை கடல்போல் பொங்க, அகமலர் முக மலர்ந்தான் வேந்தன் ஒளவையை நோக்கி, "சிற்றரச

பன்னிரண்டாண்டு கப்பங் கட்டாதொழிக, எங்கும் இருசிறை வாரி வாரி யாசகர்களுக்குக் கொடுங்கள், ஆலயங்களில் விழாக்கள் நடைபெறுக" என்று கூறி, மீண்டும் தன் மகவை புத்திர வாத்சல்யம் மிக்கவனாய் ஆவலோடு நோக்கினான். குழந்தை வெகு அழகாக இருந்தது. ஔவையார் அக் காட்சியினைக் கண்டு களித்தார். அவர் செந்தமிழ்ச்சுவை ததும்பும் தமது வாயைத் திறந்து, " கையின் கண் உள்ளதுவேலே, காலின்கண் உள்ளது போர்க்கோலங் கொண்டபோது அணிந்த வீரக்கழல், உடம்பில் உள்ளது வேர்ப்பு, கழுத்தில் உள்ளது ஈரம்புலராத பசும்புண், பனந்தோட்டையும் வெட்சி மலரையும் வேங்கைப் பூவுடனே கலந்து தொடுத்து உச்சியில் சூடிப் பகைவரை வெகுண்டு பார்த்தக்கண், தவப் புதல்வனைக் கண்டும் சிவப்பு நீங்கினதில்லை, ஆதலால், இவனைச் சினப்பித்தவர்கள் பிழைப்பதுண்டோ?" என வியந்து கூறி மகிழ்ச்சி யடைந்தார்.

குழந்தை பிறந்த செய்தி நகரமெங்கும் பரவியது. அந் நகரவாசிகள் அதனைக் கேட்ட மாத்திரத்தில் தங்கள் வயிற்றிற்றான் தனயன் பிறந்தாற் போலப் பெருமகிழ்ச்சி யடைந்தார்கள். அன்று முழுவதும் யாவரும் களிப்பென்னுங் கடலில் ஆழ்ந்தார்கள், " நம் மரசன் நீடுவாழ்க, அவன் தோன்ற

லும் நீண்ட ஆயுளைப் பெற்று விளங்குக" என்று வாயார வாழ்த்தினார். அமைச்சர் சுற்றமும் கனிகளும் கலந்து நகரத்தார்க்கு வழங்கினர் அன்று நல்ல முகூர்த்தத்தில் அறிவோர் குழந்தைக்குப் 'பொருட்டெழினி' என்ற நற்பெயரை இட்டார்கள், அரசனும் அடங்கா மகிழ்வு கொண்டான்.

## 8 மாபெரும்போர்

அஞ்சிக்கு அஞ்சிப் புறங்கொடுத்து ஓடிய 'காரி' என்பவன் தன் நண்பன் 'சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை' என்பானோடு சேர்ந்து ஒரு பெரிய சேனையுடன் அஞ்சியை எதிர்க்கத் துணிந்தான் அவ்வமயம் சேரமான் கொல்லிமலை நாட்டை யாண்டு வந்த 'ஓரி' என்பானை முதலில் வெல்ல நினைந்தான் அதனை யுணர்ந்த ஓரி, தன் நண்பனான அஞ்சியைத் தனக்கு உதவிபுரிய வேண்டினன் அஞ்சியும் அதற்கு உடன்பட்டு, சோழ பாண்டிய மன்னரையும் உடனழைத்துச் சென்று சேரமானைத் தாக்கினன், கொடும்போர் நிகழ்ந்தது முடியுடை மூவேந்தரும் மூன்று குறுநில மன்னரும் அப் போரில் ஈடுபட்டிருந்ததால், சாதாரணப் போராயிராது, அஃது மாபெரும் போராகவே யிருந்தது

முடிவில் சேரமான் அஞ்சியையும் இரு பெரு வேந்தரையும் ஒருங்கே வென்றான் சோழ பாண்டியர் தத்தம் நாடுநோக்கி ஓடலாயினர். அஞ்சி, சேரமா

னுக்கு 'அருசிக் தகடூர்க் கோட்டைக்குள் புகுந்து கொண்டான். சேரமானும் அவனை விடாது, பின் பற்றிச் சென்று தகடூரை முற்றுகை யிட்டான். அஞ்சாக் நெஞ்சம் படைத்த அருசி எக்காரணத்தாலோ சேரமானை எதிர்க்கத் தயங்கினன். அதுகண்ட ஔவையார் அவனுக்குப் போரில் உற்சாகம் உண்டாக்க எண்ணினர். அவர் அவனை நோக்கி, "வேந்தே! மலைச் சாரலில் உறையும் வலிமையுள்ள புலி சீறின், எதிர்த்து நிற்கவல்ல யானையும் உளவோ? ஞாயிறு கொதித்து எழுந்தால் மயங்கி வானிடத்தும் திசையிலும் கண்ணும் செறிந்த இருள் உண்டோ? பாரத்தின் மிகுதியால் நிலத்திற் பதிந்த சகடத்தின் அச்சினைப் போக்க மணற் பாக்கவும், கற்பிளக்கவும் நடக்கவல்ல மனச் செருக்குடைய கடாவிற்குச் செல்லற்கரிய துறையும் உண்டோ? அவை போல, நீ அமர்க்களம் புகுந்தால் இம் மண்ணுலகில் உனது நாட்டைக் கைப்பற்றி ஆரவாரிக்கும் வீரரும் உளரோ?" என்று கூறினர்.

ஔவையின் மொழி வேதவாக்கிய மென்று கருதும் மாண்பயான்மை யுடைய அருசி அவர் உரைத்ததைக் கேட்டு, மனத்தெளிவும் உற்சாகமும் கொண்டு போருக் கெழுந்தான், பகைவனாகிய சேரனைச் சின்னாபின்னப் படுத்தினான். சேரமானது குதிரை வீரர்களிற் பலர் உயிர் தப்பினாற் போதும் என்று ஓட

டம் பிடித்தனர். அஞ்சியின் சேனையும் சோர்வால் அலைக்கழிக்கப் பட்டது. அஞ்சி, சிறந்த வீரம் கொண்டு போர் புரிந்தான்; முடிவில் பகைவர் படைகளால் புண் பட்டான்.

தம் வேந்தர் பெருமான் போர்க் களத்தில் புண் பட்டு வருந்திக் கிடப்பதைக் கண்டார் ஔவையார். அவர் அவன் முன் சென்று அவனை நோக்கி, "பெரிய தகை மையை யுடையாய்! நீ சிறிய புண்பட்டபடியால் உன் னுடன் பலர் மாண்டனர். திண்ணிய பிணிப்பை யுடைய முரசம் இழுமென்னும் ஓசையை யுடையதாய் ஒலிக்க, மேற் சென்று போரை வெல்லுதல் இனி எங்கே யுளது?" என்று அவனது போர்த் திறத்தைக் கொண் டாடினார். அது கேட்ட அஞ்சி மகிழ்வெய்தி, பின்னும் போரை விரும்பியவனாய்ப் பகைவரை எதிர்த்தான். அவ் வமயம் சேரமான் விடுத்த படை யொன்று அஞ்சியின் மார்பிற் பாய்ந்தது. அந்தோ! இரவலர்க்கு வரம்பின்றி அளித்து வந்தவனும், வீரலட்சுமி தங்கப் பெற்ற தோள்களை யுடையவனும், நற்குண நலமெல்லாம் வாய்ந்தவனும், ஔவையாரது ஆருயிர் நண்பனு மான அதியமான் நெடுமானஞ்சி மண்ணுலக வாழ் வை நீத்து, விண்ணுலக வாழ்வை எய்தினன்.

## 9. ஔவையார் புலம்பல்

அஞ்சி இறந்து பட்டதைக் கண்ட ஔவையார் ஆற்றொணாத் துயர் அடைந்தார், அவனது அரிய

பெருங் குணங்களைக் கூறிய புலமையினர் "எம் வேந்தன் சிறிது மதுவைப் பெறினும், எங்கட்குக் கொடுக்காது உண்ணான், இப்போது அவ்வாறு எங்கட்குக் கொடுப்பது கழிந்ததே, பெரிய அளவினையுடைய மதுவைப் பெறின், அதனை எங்களுக்குக் கொடுப்பான், யாங்கள் உண்டபின்னர் எஞ்சியதையே அருந்துகாவான், அது கழிந்ததே, சோறு சிற்றளவினையுடைத்தாயினும் பல கலங்களில் வைத்துப் பலரோடும் உண்பன், அது கழிந்தது, மிக்க அளவினையுடைய சோற்றின் கண்ணும் மிகு பேரோடு உண்பன், அது கழிந்தது, என்போடு கூடிய ஊன் தடியுள்ள இடம் முழுவதும் யாங்கள் உண்டு களிக்க எங்களுக்கு அளிப்பன், அது கழிந்தது, எங்களுக்கு மாலை சூட்டும்போது புலால் நாறும் எங்கள் தலையைத் தான் கொண்ட அன்பு பெருக மணநாறும் தனது கையால் தடவுவன், அது கழிந்தது, அஞ்சியது மார்பகத்தே தைத்தவேல் அவனது மார்பளவில் மாத்திரம் தைத்ததல்ல, அது அரிய தலைமையையுடைய பாணரது மண்டையின் துளையில் உருவியும், அவரால் காப்பாற்றப்படும் சுற்றத்தாரது விழிப்பார்வையை மழுங்கச் செய்தும், அழகிய சொல்லை ஆராயும் நுணுகிய ஆராய்ச்சியாளரது நாவின்கண் வீழ்ந்தும் சென்றது. எமக்குப் பற்றாகிய எம் இறைவன் எங்குள்ளானோ? இனிப் பாடுவோரும் இல்லை பாடுவோர்க்கு ஒன்று ஈவாரும் இல்லை. குளிர்ந்த நீர்த் துறையில் பூக்கும் பகன்றைப்பூ பிறரால் சூடப்படா

த்ததுபோல், பிறர்க்கு ஒரு பொருளைக் கொடாமல் இறக்கும் உயிர்கள் மிகப்பல" என்று கூறிய புலமையினர். பின்னும், அவ் வம்மையார் அவன் இறந்ததற்கு ஆற்றாது புலம்புபவராய், "அஞ்சி யின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி இல்லாது போகக் கடவன, யான் உயிர் வாழும் நாளும் எனக்கு இனிப் பயன் படாமையால், அது இல்லா தொழியட்டும்" என்று கூறிப் புலம்பினார்.

பின்னர், அதியமானது உடல் எரிக்கப்பட்டது. அவ்வம்மை ஒளவையார், "ஈமத்தீ, எம் வேந்தனது பூத உடலைச் சிதைக்காமல் அவியினும் அவிக, அல்லாமல் சிதையும்படி ஓங்கி எரியினும் எரிக, ஆனால் கதிரவனை ஒப்பான புகழ் உடம்பு ஒரு காலத்தும் அழியாது" என்று, அஞ்சியினது புகழை மேம்படுத்திக் கூறி வியந்தார்.

## 10. பொகுட்டெழினி பட்டம் ஏற்றது

ஒளவையார் முதலிய பெரியோர்கள் அஞ்சியது மகனான பொகுட்டெழினிக்கு முடி சூட்ட ஓர் நன்னாளைக் குறிப்பிட்டனர். குறித்த தினத்தில் நகரை நன்றாக அலங்கரித்தனர், வீதிகளில் பூரண கும்பங்களும் பொற்பாலிகைகளும் பாவை விளக்குகளும் வைத்தார்கள், குலைக்கமுகும் குலைவாழையும் கரும்பும் வஞ்சிக்கொடியும் பூங்கொடியும் ஆகிய இவற்றைக்

கட்டவேண்டிய இடங்களிற் கட்டினார்கள், தூண்களில் முத்து மாலைகளைக் கட்டினார்கள், வீதிகளிலும் மன்றங்களிலும் பழைய மணலை மாற்றிப் புது மணலைப் பரப்பினார்கள்; துகிற் கொடிகளை மாடங்களிலும் வாயில்களிலும் கட்டினார்கள், தெய்வங்கள் உறையும் கோவில்களிற் செய்யவேண்டிய காரியங்களை ஏற்பச் செய்தார்கள்.

குறித்த நல்வேளையில் பெரியோர் பொகுட்டெழினியை மங்கள நீரில் நீராட்டினர்; அரசன் அணிய வேண்டிய ஆடை யாபரணங்களை அணிவித்தனர், பூமாலைகளைப் புனைந்தனர், கலவைச் சாந்தங்களைப் பூசினர், இவ்வாறு அரச கோலத்தோடு விளங்கிய பொகுட்டெழினி அரச மண்டபத்தை யடைந்தான்.

பின்னர், செய்யவேண்டிய சடங்குகள் முறையே செய்யப்பட்டன ஔவையார் முதலிய பெரியோர் மணிகள் பதித்த முடியை எடுத்து வாழ்த்தி, பொகுட்டெழினியின் முடிமீது வைத்து ஆசீர்வதித்தனர் பல்லிசை வாத்தியங்கள் முழங்கின. நான்மறைக் கிழவர் ஆசி கூறந்தனர் பொகுட்டெழினி செங்கோலைக் கையில் ஏந்தினன்

அவ்வமயம் ஔவையார், பொகுட்டெழினியால் குடிகள் சமாதானத்தையும் களிப்பையும் அடைவார்

கள் என்று கருத்தை வைத்து, அரசனை நோக்கி, “உயர்ந்தோய்! நீ, திங்களாகிய கலை நிறைந்த மதியை யொப்பை. ஆதலின், நின் நிழற்கண் வாழும் குடிகட்குத் துன்பமாகிய இருள் எவ்விடத்துள்ளது?” என்று அவனது நற்குண நற்செயல்களைக் குறிப்பாக வெளிப்படுத்திப் புகழ்ந்தார்.

பெரியோர் ஆசியாலும், இறைவன் இன்னருளாலும் பொகுட்டெழினி நற்குண நற்செயல்களை யுடையவனாய் வறியோர்க்கு வழங்கிச் செங்கோல் மன்னனாய் அரசாண்டிருந்தான்.

# IV. வள்ளல்—குமணன்

## 1 குமணன்

கொங்குமண்டலம் என்பது தமிழ் நாட்டில் உள்ள மண்டலங்களில் ஒன்று. அது சேலம், கோயமுத்தூர் நீலகிரி ஜில்லாக்களைச் சேர்ந்த நாடாகும். கோயமுத்தூரைச் சேர்ந்த உடுமலைப்பேட்டைத் தாலுகாவில் 'குதிரை மலை' என்னும் ஒரு மலையுள்ளது. அதனருகில் 'குழுமம்' என்று ஒரு ஊர் உண்டு. இம் மலை சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் 'முதிர மலை' என்ப பெயர் பெற்றிருந்தது. குழுமம் என்னும் பதி, 'குழுமூர்' என்ற பெயருடன் இருந்தது. இக் குழுமூரும் அதனைச் சார்ந்துள்ள முதிரமலையும் சில அரசரால் ஆளப்பட்டு வந்தனவாகச் சங்க நூல்களால் தெரிகிறது. வருடங்கள் ஆக ஆக, ஊர்களின் பண்டைப் பெயர்கள் மாறுதல் இயல்பே யாதலால் 'முதிர மலை' 'குதிரை மலை' என்றும் 'குழுமூர்' என்பது 'குழுமம்' என்றும் வழங்கப்படுகிறதென்பதில் ஐயம் ஒன்றுமில்லை.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது"

கொடுதத சேரமான பெருஞ சோறறு உதியன சேரலாதன இந நாடடை ஆணடு வநததாகத தெரிகிறது.

" பலலான குனறிற படுகிழற சோகக
நலலான பரபபிற குழூஉா ஆஙகண
கொடைககடன எனற கோடா நெஞசின
உதியன "
—அகநானூறு

அததனம உயரசசியுறற சேரன உதியன ஆணடிருநத நாடடை, அவனுககு அனேக ஆணடுகடகுப பினனா, இறறைககுச சறறேறக குறைய ஆயிரதது முநநூறு ஆணடுகடகு முனனா, 'குமணன' எனனும மனனவன ஆணடுவநதான

இம மனனன, வரையாது கொடுககும வளளற றனமையிற சிறநதவனெனறே கூறுதல அமையும, தமிழருமையினையும புலவா பெருமையினையும நன குணாநது பரிசில நலகும பானமையுடையன

## 2. பெருஞ சிததிரனா

புகழ மணம பெறற குமணன கொஙகுநாடடில முதிரமலை நாடடை யாணடு வருகையில, சோழ நாடடில 'பெருஞ சிததிரனா' எனனும பெயா வாயநத நலலிசைப புலவா ஒருவா இருநதாா இயறகையில அனனவா இபபெயா பெறறனரோ அனறி, செயறகையில வநத பெயரோ அறியோம உலகதது இயற

கைப பொருளகளைக கம கண முதலான புலன அறிவுகொண்டு பலதிறப்பட்ட வண்ணங்கள் கலந்து தூரிகையால படத்தில பன்னாளும் வருந்தி ஓர் ஓவியத்தைத தீட்டும் சித்திரக காரியைப்போன்று, உலகில தோன்றும் மலை, கடல் முதலிய பெருந தோற்றமுதற்கொண்டு அணுவளவான சிறு தோற்ற மீருக உள்ள எல்லாவற்றையும், தமது மன அறிவைக கருவியாகக கொண்டு, ஆராய்ந்து உள்ளமாகிய படத்தில தீட்டி, சமயம கிடைக்கபோது அககாட்சியிலே தோய்ந்து கிடந்த உணர்ச்சியை வடிவமாக்கி, நற்றமிழை நல்முறை பயின்ற நாவால் பைந தமிழ்ப்பாவாகப் பாடுவதில் மிக்க சமர்த்தரானது பற்றியே, இப்புலவர் பெருமானுக்கு இப்பெயர் வந்ததோ என எண்ணவேண்டி யிருக்கின்றது

இவர், இளமைப் பருவத்திலேயே ஓர் நல்லாசிரியனை யடுத்து கலமுறைய பயின்றவர், முருகு விரிந கொளிரும் தமிழ் மலரைக் கம அகத்தே வைத்தவர், சொற்சுவை பொருட்சுவையோடு கவிபாடும் போற்றல் பெற்றவர் இப்பெருமான் கம் முதிய தாயுடனும் மனைவியுடனும் வாழ்ந்து வந்த நாளடைவில புலவர்க்குப் பல மக்கள் உண்டாயினர் மக்கட பேற்றினைப் பெற்ற புலவர் பொருட்பேற்றினைப் பெற்றாரிலலை இது உலக இயற்கையே அன்றோ ? மலர்வனம், மலைபிட்ட செல்வத்தாக்கு மகிழ் ஓர் மகவும் காரர்,

ஆனால், குடிக்கக் கூழ் இலாததுக் குறைவின்றி மக்களைத் தருவான புலவர் நாவண்மையில் வறுமை நோயால் வாடத் தலைப்பட்டனர்.

கல்வியறிவு பெற்ற மக்கள் பொருள் இன்றி வாடலும், அது பெறாத மக்கள் பொருள் பெற்று வாழ்தலும் கண்கூடாகக் காண்கின்றோம். கல்விக்குத் தலைவி கலைமகள் ஆவள்; பொருட்குத் தலைவி அலைமகள் ஆவள். கலைமகள் அலைமகட்கு 'மருகி' யாகின்றாள். ஓர் குடும்பத்தில் மாமியும் மருகியும் ஒன்றுபட்டு வாழ்தல் அரிதன்றோ? அலைமகள் ஒருவனைப் பற்றியிருந்தால், அவனிடத்துக் கலைமகள் நெருங்குவதைக் காணோம். ஆனால், அரிதாக இவ்விருமகளிரும் சிலரிடத்தே ஒன்றி வாழ்கின்றார்கள். மாமியும் மருகியும் மனம் ஒன்றுபட்டு வாழ்கின்ற சில குடும்பங்களை நாமும் கண்கூடாகப் பார்க்கின்றோமன்றோ? இக்காரணத்தாலோ, அன்றி எக்காரணத்தாலோ, புலவரிடம் அலைமகள் அண்டவில்லை.

புலவரது குழந்தைகள் பசியால் பெருந்துயர் உழன்றனர். சிறிதளவு சோற்றைச் சமைத்தால், அது, பிள்ளைகட்கே போதவில்லை.

இங்ஙனம், பிள்ளைகள் படும் பாட்டைக் கண்டு சகியாத புலவரது மனைவி தன் கணவனைத் தன் நோவிழியால் நோக்கப் புலவர் வானத்தை நோக்குவார்.

ஒரு நாள் புலவர் பெருந்தகை ஓர் இடத்தமர்ந்து சிந்திக்கலானார், "எலனே நமது ஊழ்வினைப் பயன் இருந்தவாறு! நாம் யாரிடம் சென்று பொருள் கேட்பது? உலகில் செல்வராயினோர் பலர் உளர் என்றாலும், அவர் யாவரும் அறிவுடைச் செல்வரா காரே! அறிவுடை மக்களிடத்தே சென்றாலன்றோ அவர் நமது பெருமையையும் வறுமையையும் தனக்கு உணர்ந்து பரிசில் நல்கத் தக்கவர். புலலறிவாளர் செல்வரே யாயினும் நாம் பெறும் பயன் என்?

"செல்வமவந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணார்
சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையுநோக்கார்
வெல்வதே நினைவதல்லால் வெம்பகை கடிதென் றெண்ணார்
வல்வினை விளைவுமோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்"

—வில்லிபாரதம்

திருவளாகத்தும் தீந்தமிழாகிய தேனினும் இனிய பாக்களை, தமிழின் அருமையையும் புலவரது பெருமையையும் கணித்தறியவல்ல பேராற்றல் வாய்ந்த வள்ளல்களிடத்தன்றோ பாடவேண்டும் அவர்களிடம் சென்றால் நம்மைப் பிணித்து வருத்தும் வறுமையும் நீங்கும் அவ்வாறு செல்வோம் என்றாலும், கொடையிற் சிறந்த வள்ளல்கள் காலமாயினரே! என் செய்வோம்? ஆ! நல்ல யோசனை! தற்போது யாவரும் சிறப்பித்துக் கூறும் தக்டூர் மன்னன் 'அதிக

மான் நெடுமான்அஞ்சியிடம் செல்வேன்; அவனே நமது வறுமையை யகற்றும் பெருமை வாய்ந்தவன்" என்று துணிவுகொண்டு, பல நாடுகளைக் கடந்து வருந்தி, முடிவில் புலவர் தகடூரை யடைந்தார்.

எக்காரணத்தாலோ, நெடுமான்அஞ்சி புலவரைக் கண்டு வரவேற்கவில்லை; ஒரு நாள் தன் ஏவலர் மூலமாகப் புலவர்க்குப் பரிசில் அனுப்பினன். புலவர் அவற்றைப் பெற மறுத்து, முனிவுடன் அவனூரை விட்டு அகன்றார். அகன்றவர், கொங்குநாட்டில் உள்ள குமணன் வள்ளற்றன்மையிற் சிறந்தவன் என்பதைக் கேள்வியுற்று, குழுமூரை யடைந்தார்.

## 3 புலவரும் குமணனும்

குணமன்னவன் பெருஞ் சித்திரனாரை முகமன் கூறி வரவேற்றான். குமணனின் எளிய தன்மையையும் புலவரை உபசரிக்கும் புனிதத் தன்மையுங் கண்ட பெருஞ் சித்திரனார், உள்ளத்தில் ஒருவராலும் கைசெய்ய அரிய தொரு பேருவகை கடல்போற் பொங்க, குமணனை நோக்கி, "மன்னவனே! என்னைய இரவலர்க்குத் தாயவீடுபோன்ற நின்னது முதிரமலையும், தாயைப் போலப் அன்பினைச் செலுத்தும் காருண்ய வள்ளலான நீயும் இருக்க எமக்கென்ன குறை! நீ, சுகமேவாழ்க் கடவாய்!" என்று புகழ்ந்து ஆசிர்வதித்தார்.

பின்னர், குமணன் புலவர்க்கு அறுசுவை உண்டி அன்புட னளித்தான். புலவரது பைந்தமிழ்ப் புலமையையும் அவரது நற்குணங்களையுங் கண்டு வியந்து, அவருக்குப் பரிசில்தரின் தம்மைவிட்டு நீங்குவரென நினைத்துப் பல்நாள் பரிசில் நல்கா திருந்தனன். புலவரோ, தாம் குமணனது மாளிகையில் சுகமாயிருக்கத், தம் தாயும் மனைவி மக்களும் எப்பாடு படுகின்றனரோ என்று ஏக்கமே பெரிதுங் கொண்டார். ஆதலால் விரைந்து ஊர் செல்ல விருப்பங்கொண்ட புலவர் தனது உள்ளத் தன்மையைக் குமணனுக்குக் குறிப்பாகத் தெரிவிக்க நினைத்தார். அவர் குமணனை நோக்கி, " முரசு அறையவும் வெள்ளிய சங்கு முழங்கவும் வேந்தரோடு போர் செய்தவனும், நெடிய மலைக்கண் ஒலிக்கும் வெள்ளிய அருவி கல்லை உருட்டிப் போகும் பறம்பு நாட்டிற்கு வேந்தனாகியவனும் ஆன 'பாரி வேள்' மாண்டனன். உயர்ந்த உச்சியையுடைய கொல்லி மலைக்குத் தலைவனான 'ஓரிவேள்' உயிர் நீத்தனன். காரி என்னும் பெயருடைய குதிரையைச் செலுத்திப் பெரியபோரை வென்றவனும் மாரிபோலும் வண்மையையும் மிக்க போரினையும் உடையவனும் ஆன 'மலையன்' மண்ணுலக வாழ்வை விட்டான். செலுத்தப் படாத உயர்ந்த குதிரை யென்னும் மலையையும், கூரிய வேலையும், கூவிளங்கண்ணியையும் வளைந்த ஆரத்தையும் உடைய 'எழினி' விண்ணுலகிற் கெழுந்தனன். மிக்க குளிர்ந்த மலையினைக் கண் இருள் செறிந்த

பெரிய முறையினையும் மக்கட்கு அரிய வலியினையும் பெற்ற பெரியமலை நாட்டின் 'பேகன்'வானவர் உலகிற் புகுந்தனன். திருந்திய சொல்லினையுடைய மோசியாரால் பாடப்பெற்ற 'வேள்-ஆய்' அண்டிரன் ஆண்டவன் காண். ஆசையுற்றுத் தன்னை நினைத்து வருவோரது வறுமையைப் போக்கவல்ல கைகளையுடைய 'நள்ளி' என்பான் பூவுடம்பை நீத்துப் புகழுடம்பெய்தினன்.

இவ்வாறாக வள்ளல்கள் இறந்து பட்டனர். அவர்கட்குப் பின்னர், உண்டாக்கு இரக்கம் வாய்ப் பாடி வரும் புலவர்க்குப் பரிசில் நல்க யான் ஒருவன் உள்ளேன் என்பதாக நீ இருப்பதால், நின்பால் பரிசில் பெற வந்தேன். குமண! உன்றன் மலையில் வானளாவிய மூங்கில் மரங்கள் அதிகமாக உண்டு. அங்கே மலையில் சுரபுன்னை மரங்களும் அதிகம். அவற்றுடன் பல மரங்களும் ஓங்கி வளர்கின்றன. குரங்குகள் நினது மலையில் அதிகமாக வாழ்கின்றன. பலாப் பழங்களைப் பறித்துக் கடுவன், பஞ்சுபோன்ற மயிரையுடைய தன்னைப் பெற்ற மந்தியைக் கையால் குறி செய்து அழைக்கும் பான்மையுடையது. புது வருவாய் இடையறாது வரும் நல்ல நாட்டினையும் பெற்றுள்ளாய். முதிரமலைக்குத் தலைவ! உலகம் முழுவதும் விளங்குகின்ற புகழினையும், அழகுடன் அமைக்கப் பெற்ற தேரினையும் உடையவனே! நீ எடுக்கப்பட்ட வேல் புகழ் மேம்பட்ட வண்மையுடனே பகைவரிடத்து உய்யாய்" என்று கூறினார்.

புலவர் மீண்டும் குமணனை நோக்கி, "கூர்வேலேந்திய குமண! வெற்றிப் புகழ் கொண்ட வசையில்லாத சிறந்த குடியிற் பிறந்து இசையுடன் விளங்கும் எந்தலே! நின்னைப் பாடிய யான், நீ களிப்பின்றி வெறுப்புடனே யுடைய களிற்றைத் தரினும் வேண்டேன். நீ மனம் உவந்து சிறிது பொருளைத் தரினும் அதைப் பெரிதாக எண்ணி மகிழ்வேன். என் தாய் மனைவி மக்கள் இவர்கள் படும் துன்பத்தைச் சற்றே கூறுவேன் கேட்பாயாக. என் அன்னை பெரிதும் வயது முதிர்ந்தவளாதலால் இன்னும் நன்னுயிர் போகவில்லை என்று சொல்லிக்கொண்டு வாழும் நாட்களோடு பலவாறு வெறுத்துத் தான் மிகுந்த ஊன்றுகோலையே காலாகக் கொண்டு, நடக்கவும் சக்தியற்று நரைமயிர் உடையவளாயும் கண்கெட்டவளாயும் உணர்வில்லாதவளாயும் வருந்திக்கொண்டிருக்கின்றாள். என்மனைவியோ, பசந்த மேனி உடையவள் வறுமையால் பெரிதும் மெலிந்துள்ளாளாதலால் பால் அற்ற தனங்களையுடையவள், மேலும் குழந்தைகள் வருந்திய அத் தனங்களை மெல்வதால் வலி பொறுக்க மாட்டாது வருந்துகின்றனள். உணவிற்கு வழியின்றி, குப்பையில் தானாக முளைத்த கீரையின் முனை கொய்யப்பட்ட கண்ணிலே கிளைத்த முதிராத தளிரைப் பறித்து உப்பின்றியே நீரை உலையாகக் கொண்டு அடுப்பில் ஏற்றிக் காய்ச்சி, மோர் இல்லாமலும் சோறு இல்லாமலும் வெறுங் கீரையையே உண்டு உயிர் வாழ்கின்றனர். மாசு

பல முறையும் சுவைத்துப் பால்பெருக்கிய அழுகின்றான், பின்னர், கூழையும் சோற்றையும் வேண்டி விரைந்து உள்ளே சென்று, ஒன்றும் இல்லாத மட்பாண்டங்களைத் திறந்து திறந்து பார்த்துக் கண்பிசைந்து அழுவன். அவனைப் பார்த்து அவன் அன்னை, 'புலி வருகிறது' என்று அவனுக்கு அச்சத்தை யுண்டாக்கி அவனது அழுகையைப் போக்க முயல்வாள். சிறுவன் தனியாக்கைக் கண்டு மனம் வருந்தியவளாய் அவனை நோக்கி, 'மைந்த! நின் பிதாவை நினைத்து, வெறுக்க நின் மனத்தில் காட்டுக' என்று கூறுவள். இங்ஙனம் வருந்தும் என் மனைவியும் மக்களும் மகிழுமாறு பரிசில் தந்து விரைவுடன் என்னைப் போக விடுவாய்" என்றார்.

மேலும், புலவர் சிகாமணி முதிரமலைத்தலைவனை நோக்கி, "வெற்றி மிக்கோய்! கடல் குறையும்படி நீரை முகந்து சூல்கொண்டு, வேண்டும் இடங்களில் பெய்யும் மழை நீங்கிய கோடைக்காலத்தில், உலகத்து உயிர்கள் எல்லாம் சென்று உண்ணுதற்குக் கங்கையாற்றின் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுதல் போல, எங்கட்கும் பிறர்க்கும் உபகாரத் தலைவனாய்த் தோன்றி விளங்குகின்றனை. ஆதலால் வழி பறிப்போர் இரவலரை அடித்துத் துன்புறுத்திச் செல்லா வண்ணமும், அக் கொடியவரிடம் இருந்து தப்பித்துக்கொண்டோடவும் தக்கதாக நீ எனக்குக் கொம்புகளை யுடைய

யானை யொன்றைத் தருவாயாக நின்னால் கொடுக்கப் படும் பொருள்களைக் கண்டு அவர்கள் களிப்புற்றுத் தம் வறுமையைத் தொலைக்கத் தக்க பரிசில் நல்குவாய் பனை போன்ற கையையும், விளங்கும் முத்தாகத் தந்தங் களையும் உடைய யானையை யான் விரும்புகின்றேன், அதன் மீதமர்ந்து, அதன் நெற்றிப் பட்டம் விளங்கவும், பக்க மணிகள் மாறி மாறி ஒலிக்கவும், தலைமை தோன்ற அரசு யானைமீது செல்ல விரும்புகின்றேன், குமண வள்ளலே! என் வறுமை பின்னே நின்று துரத்த உன் புகழ் முன்னே நின்று ஈர்த்துக் கொண்டுவர வந்தேன், வந்து, உனது பெருமையினைக் குறித்துப் பாடிய எனது பைந்தமிழ்ப் பாக்களை ஏற்றுக் கொள்வாயாக, எனது நிலையும் உனது தகுதியினை யும் அறிந்து அவற்றிற்குத் தக்கவாறு பரிசில் அளிப் பாயாக, பெருமானே! என நாளும் எனது மிகுதியைக் கண்டு, அரசர் நாணும்படி இவண் விடுப்பப் பெயர்ந்து போவேன், உன் வாட்போரின் முயற்சியையும் சீர் மிக்க செல்வத்தையும் படையையும் பலவாறு புகழ்வே மாக" என்று வள்ளலின் பெருங் கொடைச் சிறப் புதலியவற்றைத் தீங்கவியால் புகழ்ந்து பாடி வாழ்த்தி, தாம் களிறு பெற விரும்புவதையும் குறிப் பித்தார்

புலவர் பெருந்தகை பெருமையோடும் பொறுமை யோடும் பகர்ந்தனவெல்லாம் நன்குகக் கேட்ட குமண

ணன், அவர்பால் பெரிதும் இரக்கமும் அன்பும் கொண்டனன், வீட்டில் அவரில்லாதபோது நிகழும் சம்பவங்களை அகத்தாற் சித்திரித்துக் கூறும் பான்மைக்கே பெரிதும் மகிழ்ந்தான். அரசன் உடனே தன் ஆசனத்தினின்றும் எழுந்து, புலவர்க்கு வேண்டிய வரையில் பட்டாடைகளையும், பொன்னையும், மணியையும், முதிரமலை விளைபொருள்களையும், சிறந்த களிற்றினையும் அவர் மனம் மகிழும்படி தந்தான். குமணனது கொடைத் திறத்தைக் கண்ட சித்திரனார் சித்திரப் பதுமை போல அசைவற்று நின்றார், அவன் தந்த பொருள்களை விருப்புடன் ஏற்று, அகம் களிக்கவும் முகம் மலரவும், உடம்பு பூரிக்கவும், குமணனைப் பலவாறு வாழ்த்தி, அவனிடம் விடைபெற்றுத் தம் ஊரை நோக்கி நடக்கலானார்

## 4 குமணன் காட்டிற்புகுதல்

பெருஞ் சித்திரனார் குமணனிடம் பரிசில் பெற்றுச் சென்ற பின்னர், நாட்டில் பெருங் குழப்பம் உண்டாயது. குமணனுக்கு ‘ இளங் குமணன் ’ என்று ஒரு பின்னோன் இருந்தான் அவன் கல்வி யறிவற்ற மூடன், கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று தன் மனம்போனவாறு நடப்பவன். அவன், தன் முன்னோன் வருவோர்க்கெல்லாம் வரையாது கொடுப்பதைக் கண்டு வருந்தினன், “ தன்னிடம் உள்ள பொருள்களனைத்தையும் வறியவர்க்கே வழங்

கிய பின்னர், துன்பம் அடைபவன் இவனேயன்றோ! இவனுக்குப் பின்னர்ப் பட்டமேற்பவன் யான் அன்றோ? இவன் இறக்கும் தறுவாயில் அரசாங்கத்தில் பொருள் இன்றி யிருந்தால், வருந்துபவன் யான் அல்லவோ? எதிர்காலத்தைக் கருதி எதையும் இக் குமணன் செய்பவனாகக் காணவில்லையே! நானாயினும் அவனிடம் சொல்லிப் பார்ப்போம்" என்று எண்ணினன்.

அவன், தான் எண்ணியதைத் தன் முன்னோனிடம் கூறினன். தருமகுண வள்ளலான குமணனோ அவனது புன் சொல்லைக் கேட்பவன்? தனது இயல்பான குணத்துடனே குமணன் நடந்து வந்தான். அதைக் கண்ட இளங் குமணன் அண்ணன் மீது வெறுப்புற்றன், அவனைக் கொன்றுவிடுவதே சரி என்றும் தீர்மானித்தான். அம் முடிவை யுணர்ந்த வள்ளல், இளங் குமணனுக்குப் பயந்து காட்டிற்கு ஓடிவிட்டான். ஓடி ஒரு குகையில் உறையலானான்.

மன்னவன் மறைந்த வரலாற்றைக் கேட்ட அவனது நாட்டுக் குடிகள் பட்ட துயரம் கூற முடியாது.

குமண மன்னவன் காட்டிற் சென்ற செய்தியை யுணர்ந்த அம் மாநகர்வாழ் மக்கள்,

“மண்செய்த பாவ முண்டென்பார் மாமன்னர்மேற்
பெண்செய்த பாவ மதனிற் பெரிதென்பார்

புண்செய்த நெஞ்சை விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவம் கடலிற் பெரிதென்பார் ''

—கம்பராமாயணம்

" அந்தோ! தருமம், தயை, பிழைபொறுத்தல், அடக்கம், வாய்மை முதலிய நற்றுணை நற்செயல்களுக்கு உறைவிடமானவனன்றோ குமணன்?

' தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்பயப்பில்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணுக்கு கேள்வி
ஆயப்புகுங் காலறி வொக்கு மெவர்க்கு மன்னோன் ''

—கம்பராமாயணம்

இத்தகைய அரசனைப் பிரிந்து நாம் எவ்வாறு உய்வோம்? கொடுங்கோல் மன்னவனான இளங்குமணனிடமிருந்து நாம் எவ்வாறு கவலையின்றி வாழ்வோம்? கருணையே ஓர் உருவென வந்த குமணனைக் காட்டிற்கு ஏகச் செய்த இக் கொடும் பாவியிடமிருந்து சுகத்தை எப்படி எதிர் பார்ப்பது? மூத்தவனை நீக்கி இளையவன் பட்டம் அடைதல் எங்ஙனம் ஏற்கும்?" என்று பலவாறு குமணனது புகழையும் இளங் குமணனது துரோகத்தையும் கூறிப் புலம்பினர் சிலர், காடுசென்று குமணனைக் கண்டு, அவனுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தினந்தோறும் கொடுத்து வந்தனர் அதை யுணர்ந்த இளங் குமணன், "என் தமையனது தலையைக் கொண்டுவருவோர்க்கு நற்பரிசில்

பெறுவர்'' என்று பறைபறைவிக்கான் எனினும் என்? குணக் குன்றுப குமணனைக் கொல்ல யார்தாம் இசைவர்?

## 5 பெருந்தலைச் சாத்தனார்

சோழநாட்டைச் சேர்ந்த 'ஆவூர்' என்னும் கிராமத்தில் 'மூலங்கிழார்' என்னும் வேளாளர் ஒருவர் இருந்தார். அவர் 'நல்லிசைப் புலமை வாய்ந்த பெருந்தலைச் சாத்தனார்'க்குத் தந்தையாவார். சாதாரணமாக இருக்கவேண்டிய தலையை விட அவரது தலை சற்றுப் பெரிதாயிருந்ததனால் அவர் அப் பெயர் பெற்றார். சாத்தனார் தக்க வயதடைந்ததும் ஒரு குலமகளை நாடி மணந்து கொண்டார்; மகப்பேற்றினையும் பெற்றார். பெருஞ் சித்திரனாரைப் போன்றே இவரும் வறுமைப் பிணியால் வாட்டமுற்றார்.

"வள்ளல்களை நாடிச் சென்று பரிசில் பெற்று வருவோம்" என எண்ணி, சாத்தனார் தம் மனைவியை விட்டு ஒரு காட்டுவழியே நடந்து சென்றார். செல்கையில் குமணனிடம் பரிசில் பெற்றுக் களிற்றின் மீதூர்ந்து வரும் பெருஞ் சித்திரனாரைக் கண்டார். சாத்தனாரைக் கண்ட புலவர் களிற்றினின்றும் இழிந்து தம் இரு கைகளாலும் சாத்தனாரைத் தழுவிக் கொண்டார். சாத்தனார், "புலவீர், களிறேது? எவ்வள்ளலை விட்டுச் சென்று மீள்கின்றீர்?" என்று சித்திரனாரை வினவினார். சித்திரனார் புலவரை அன்புடன் நோக்கி, "சாத

நரே! கொங்கு நாட்டில் முதிரமலைத் தலைவனும் வள்ளன்மையிற் சிறந்தவனுமான குமண மன்னவனைப் பாடிப் பரிசில் பெற்று மீள்கின்றேன். இக் களிறு அவன் ஈந்ததே. நீர் விரும்பி அப் பெருமானிடம் சென்று, உமது வறுமையைக் கூறுக, நும் மனமகிழுமாறு பரிசில் நல்குவன்" என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

## 6 குமணனும் சாத்தனாரும்

பெருந்தலைச் சாத்தனார் முதிரமலை நாட்டை யடைந்தார், குமணன் காட்டில் வசிப்பதை உணர்ந்தார், இளங்குமணன் முன்னோன் தலையை விரும்பியதையும் கேள்விப்பட்டார், நேரே குமணன் இருக்கும் காட்டிற்கு ஓடினார், வள்ளலைக் கண்டனர். குமணன் புலவரை வரவேற்றான் புலவர் அரசனை நோக்கி,

"நல்ல போரைச் செய்கின்ற குமண! என்று இல்லத்தில் வறுமையின் கொடுமையால் சமைத்தலாகிய தொழிலைச் செய்தலை யொழித்ததால் குமிழ்களை யுடைய அடுப்பில் காளான் பூத்திருக்கின்றது. உணவின்மையின் பசியால் வருந்தி என் மனைவி மெலிந்தனள் அவளது தனங்கள் பாலை உடைத்தா யிராமல் தோலாகத் தன்மையுடனே மடிந்து கிடக்கின்றன. பசியால் வாடும் மைந்தன் பால் இன்றி வறுவிய அத் தனங்களைச் சுவைத்துப் பார்த்துப் பாலின்மையால்

தாய்முகம் பார்த்து விம்மினன். அவளோ விழியினின்றும் நீரை முத்து முத்தாகச் சொரிந்து என்னை நோக்கினள். யானோ கொடையிற் சிறந்த நின்னை நினைத்து வந்தடைந்தேன். நீயோ, சுரங்களுக்கு ஏற்ப நரம்புகளை யமைக்கப்பட்ட இருக்கிய நல்ல யாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையும் உடைய கூத்தரது வறுமையைப் போக்கும் வள்ளல்களது குடியிற் பிறந்தவன். என்னுடைய நிலையை யறிந்தாயாகில் நீ வறுமையுற்ற இந்நிலையினும் உன்னிடமிருந்து பரிசில் பெறாது விடேன்" என்னும் பொருள்பட,

"ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பில்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்து முகநோக்கி
நீரொடு நிறைந்த வீரித ழுண்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண!
என்னிலை யறிந்தனை யாயி னின்னிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே!"

என்ற பைந்தமிழ்ப்பா வொன்றினைப் பாடினார்

தமிழின் அருமையும் புலவர் பெருமையும் அவர் பாடிய பாவினினும் பருகத் திகைத்த படை-வேற் குமணன், அகம் மலர முகம் மலர்ந்தான், புலவரைத் தம் இரு கைகளாலும் சேர்த்து மார்போடு புல்லினன், வறுமை செய்யும் துன்பத்தினையும் புலவர் பாட்டின் இன்பத்தினையும் எண்ணினன், தீங்கவி பாடிய செய்யுட் புலவர்க்குத் தருதற்குத் தன்னிடம் யாதுளது என்றெண்ணி ஏங்கினன் பின்னர் அவன் புலவரை அன்போடு நோக்கி, "புலவீர்! பாவியேன் வேண்டும் பொருளெல்லாம் நயக்கும் பக்குவந்தன்னில் வந்திலீர், காடுறைந்து கடுந்துயர் உழக்கும் காலத்தில் வந்து கவல்கின்றீர் எனினும் என்? என் அருமைத் தம்பியான இளங்குமணன் என் தலையைக் கொய்து வருவோர்க்குப் பெரும் பரிசில் நல்குவதாகப் பறை யறைவித்துள்ளான் ஆதலின், நீர் எமது தலையை யறுத்து, அதனைத் தம்பியிடங் காட்டிப் பரிசில் பெற்றேகுவீர்!" என்று முக மலர்ச்சியுடன் கூறினன்

குணக்குன்றாய குமணன் கூறிய கூற்றைக் கேட்ட புலவர் கோமானது மனம் கரைந்து கண்களில் நீர் ஆறாய்ப் பெருகிற்று, செயலின்னதென்று தோன்றாது மயங்கி நின்றார். அப்போது குமணன், "புலவரே! என் தயங்கவேண்டும்? என்றைக்கிருப்பினும் ஒருநாள் இறக்கவேண்டியதுதானே!

என்றோ மரிப்பினும் இன்றே மரிப்பது மேல். அதி லும் சமயம் கிடைக்கும்போது சாவது மேல். நான் உயிர் துறந்தால் என் தலை எதற்கு உதவப்போகின்றது? நரிகளும் நாய்களும் கூளிகளுமே பிய்த்துத் தின்னும், அவை தின்பதற்கு முன் என் தலையால் உமது வறுமை தீரப் பரிசில் பெறுவீர். ‘தமிழ்ப் புலவர் வறுமையைத் தொலைக்கத் தலை யீந்தான் குமணன்’ என்று நற்புகழ் என்னைப்போல் பெறலாகாதோ? இம்மாய வுடலைச் சுமந்திருப்பதால் பயன் என்ன? இந்த யாக்கையோ,

‘வினையின் வந்தது, வினைக்குவிளை வாயது,
புனைவன நீங்கிற் புலால்புறந் திடுவது,
மூத்துவிளி வுடையது, தீப்பிணி யிருக்கை,
பற்றின் பற்றிடம், குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது’

—மணிமேகலை

இவற்றை யெல்லாம் நீர் அறியாதவர் அல்லர், ‘காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்’ என்று வண்ணம் என் தலையால் பரிசில் கிடைக்கும் இக் காலத்தை நீர் விடுக்க வேண்டா, தலையின்றித் தம்பியிடம் சென்றால் பரிசில் பெறமாட்டீர் இதோ என் வாளைத் தருகின்றேன், உமது வேலையை முடித்துக்

போககுக எனனததையும ஆறறது, சேரமன நாடடை மீணடும அடையும வரையில துறவி வேடத்துடன இருநதானலலவோ? அததகைய சகோதர அனபு வாயநத அரசர குலததிலே பிறநத நீ, சகோதர அன பிலலர இருததல மிகவும வெறுககத தககதா யுளளது" எனறு முகவுரையாக இவை யனைததையுங கூறிய பினனும அவனை நோககி, "நிலையறற இவ வுலகில சம பெயர நிலைபெறறிருகக வேணடுமென நினைந தோர தமது நற செயலகளால நற புகழை நிலைநாடடி மாயநதனர. மிகக செலவததையுடைய மககள இரபபோர்க்குக கொடாமையால, புகழுடமபு எய்தாது ஒழிநதனர, அவர்கள உலகததோடு ஒதது போதலை அறியாதார. தாளவளையும தாழநதுளளவையும ஓசை தருவனவுமான மணிகள மாறி மாறி ஒலிகக, அழகிய நெறறியையும அசைநது செலலும இயலபினையும உடைய யானைகளை இரககும புலவரககு அதிகமாகக கொடுககும அழிவிலலாத நலல புகழைப பெறற வலிய குதிரையை யுடைய தலைவனை (குமணனை)ப பாடி நின றேன அத தலைவன, 'பயன இனறியே பாடிய இப புலவன பரிசில இனறி வாடடமுறுகினறனன, வாடட முறறு இவன திருமபிச செலலல நான நாடிழநது அனுபவிககும துயரினும அதிகமான தாகும' எனறு, தன கூறிய அறிவால என ணித தனனிற சிறந்தது பிறிதொன றிலலை எனத துணிநது, தனது தலையை வெட்டக தன கூறிய

வாளை என்னிடம் தந்தான். போரிற் புறங்
கொடாத தன்மை யுடையானது அரிய செய்கை
கண்டு இவ்வாளுடனே பெருவகையோடு நின்னிடம்
வந்தேன்" என்று கருக்கொண்ட கொண்டல் நீரைச்
சொரிகின்ற போன்று தீந்தமிழால் சொற்களைப்
பொழிந்தார்.

## 8 பிரிந்தோர் கூடல்

பெருந்தலைச் சாத்தனார் உரைத்தவை எல்லாம் கேட்ட இளங்குமணன் நல்லறிவு பெற்றான், முன்னோனது பரந்த சிந்தையையும் விரிந்த நோக்கத்தையும் எண்ணினான்; தமையனுடைய அருள்வழியும் கண்ணும், புன்சிரிப்புத் தவழும் பொலிவுபெற்ற முகமும் அவன் அகக்கண்ணே தோன்றின. தான் செய்த துரோக சிந்தனையை எண்ணி உடல் நடுங்கினான்; விழிநீர் சிந்த 'ஓ'வென்றலறினான். அவன் புலவரது தாள்களைப் பற்றிக்கொண்டு, "பெரியீர்! இன்னே என் அண்ணலைக் காண விழைகின்றேன், வம்மின்" என்று அரற்றினான்.

புலவர் பெருமகிழ்ச்சி யடைந்து இளங்குமணனை அழைத்துச் சென்று குமணனிடம் விட்டார். பின்னோன் முன்னோனது கழலடிகளைப் பணிந்து போற்றி, தான் செய்த தவறுகளை மன்னிக்குமாறு வேண்டினன். குணக்குன்றாய குமணன் தன் இளவலை மார்புறத் தழுவிக் களித்தான். பின்னர் மூவரும்